## ஆசிரியர்

ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் பிரபலப் பத்திரிகை ஒன்றைச் சிறப்பாக வெளியிடும் ஆசிரியர் என்று ஆயிரக் கணக்கான வாசகர்கள் எண்ணுகிறார்கள். சங்ககால நூல்களின் பெருமையை உணர்ந்த தமிழன்பர்கள், 'தமிழ்த் தாத்தாவின் தலைமாணாக்கர்' அவர் என்று சொல்கிறார்கள். தமிழையும் சமயத்தையும் பல வகையிலும் வளர்க்கும் சங்கங்களுக்கு, 'அவர் தமிழ்நாட்டின் சிறந்த சொற்பொழிவாளர்களில் ஒருவர்' என்பது நன்றாகத் தெரியும். இனிக்கும் கதைகளையும் சந்தம் நிறைந்த பாட்டுக்களையும் ரஸமாகச் சொல்லும் 'ஜோதி மாமா'வாகக் குழந்தைகளுக்கு அவர் விளங்குகிறார்.

இத்தகைய பெருமை மிக்க கி. வா. ஜ. அவர்களே அருமையான இந்த நூலை எழுதியிருக்கிறார். எளிதில் கிடைக்காத பல நூல்களைப் படித்துக் குறிப்புக்களைத் திரட்டி, புராணங்களிலும் தமிழ் இலக்கியங்களிலும் கிடைக்கும் வரலாறுகளைத் தொகுத்து அரும்பாடு பட்டு அவர் தமிழ் நாட்டுக்கு வழங்கும் இணையற்ற புத்தகம்: நவக்கிரகங்கள்.

இந்தப் புத்தகத்தைப் படித்துப் பார்த்தால், நூலின் பெருமையோடு ஆசிரியரின் நுண்மையான அறிவையும் புதுமையான பாணியில் அவர் விஷயத்தை அமைத்துள்ள சிறப்பையும் கண்டு இன்புறலாம்.

## ஓவியர்

இதில் உள்ள ஓவியங்களைத் தீட்டிய ஓவியர் மணி ஸ்ரீ எஸ். ராஜம் இசையிலும் ஓவியத்திலும் வல்லவர். இவருடைய ஓவியங்கள் நம் நாட்டுக் கலைப்பண்பை நன்றாகப் புலப்படுத்தும் முறையில் அமைந்தவை. இந்திய ஓவிய முறையில் ஓவியம் வரையும் சிறந்த சித்திரகாரர்களில் இவரும் ஒருவர்.

# நவக்கிரகம்

கி. வா. ஜகந்நாதன்

[ ஓவியங்கள்: எஸ். ராஜம் ]



கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை-4

# முகவுரை

"குருகாம் வயிரமாம் கூறும் நாளாம்
கொள்ளும் கிழமையாம் கோளே தானும்"

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் ஒரு திருத்தாண்டகத்தில் பாடுகிறார். கோள்கள் எல்லாவற்றையும் சிவபெருமானுடைய திருவுருவமாக அவர் கண்டார். மனித வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளுக்கும் காலக்கூறுகளுக்கும் நவக்கிரகங்கள் காரணமாக இருக்கின்றன. வானநூல், சோதிட நூல் ஆகியவை நவக்கிரகங்களின் வெவ்வேறு இயல்புகளை ஆராய்ந்து சொல்கின்றன.

புராணங்களிலும் மந்திரசாஸ்திரங்களிலும் கிரகங்களின் உருவங்கள், வரலாறுகள், வழிபாட்டுமுறை முதலியவை விரிவாக இருக்கின்றன. இவை யாவும் நவக்கிரகங்களைப் பற்றிய ஆராய்ச்சி பல திறத்தில் பல காலமாக அறிஞர்களிடையே நிகழ்ந்துவந்திருக்கிறது என்பதைக் காட்டுகின்றன.

நவக்கிரகங்களைப் பெரும்பாலான கோயில்களில் பிரதிஷ்டை செய்து வழிபடுகிறார்கள். வெள்ளியிலும் பொன்னிலும் திருவுருவம் எழுதிப் பூசிக்கிறார்கள். நவக்கிரக சாந்தி செய்கிறார்கள்.

நவக்கிரக உபாசனை வழிவழியே வந்துகொண்டிருக்கிறது. நவக்கிரகத்தின் திருவுருவங்களை வேறு வேறு விதமாகப் பலர் வெளியிட்டிருக்கிறார்கள். நல்ல முறையில் சாஸ்திர சம்மதமான வகையில் நவக்கிரகப் படங்களைக் கலைமகளில் வெளியிட வேண்டுமென்று விரும்பினோம்.

இந்திய ஓவியக் கலையில் துறைபோன ஸ்ரீ ராஜம் அவர்களும் இதைப்பற்றி நெடுங்காலம் சிந்தித்திருந்தார். ஒன்பது கிரகங்களின் படங்களையும் அற்புதமாக எழுதி முடித்தார். கலைமகளில் ஒவ்வொன்றாக அவற்றை வெளியிட்டோம்.

படங்களை வெளியிடுவதோடு கிரகங்களைப்பற்றிய கட்டுரைகளையும் வெளியிடுவது நலமென்று தோன்றியது. வேதம், சாஸ்திரம், மந்திரம், புராணம், தமிழ் இலக்கியங்கள், வழக்கு முதலியவற்றில் ஒவ்வொரு கிரகத்தைப்பற்றியும் வரும் செய்திகளைத் தொகுத்தேன். ஒன்றும் விடாமல் முற்றும் தொகுத்துவிட்டேன் என்று சொல்ல இயலாது. கிடைத்தவற்றையெல்லாம் சேர்த்துவைத்துக் கட்டுரைகளை எழுதினேன். 'கும்பன்' என்ற புனைபெயரோடு அவை வெளியாயின.

படங்களையும் கட்டுரைகளையும் கண்ட அன்பர்கள் பாராட்டி எழுதினார்கள். பலர் படங்களைத் தனியே எடுத்துவைத்துப் பூசிக்கலானார்கள். வேறு பலர் இவற்றைச் சேர்த்துப் புத்தகமாகத் தரவேண்டுமென்று விரும்பினார்கள். அதனால் இப்போது இப்புத்தகம் வெளியாகிறது. இதில் ஸ்ரீ முத்துசாமி தீட்சிதரவர்கள் பாடியுள்ள நவக்கிரகக் கீர்த்தனைகளும், நவக்கிரக தியான சுலோகங்களும், நவக்கிரக மங்களாஷ்டகமும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

இந்தப் படங்களை அழகாகத் தீட்டிய ஸ்ரீ ராஜம் அவர்கள் செய்த உபகாரம் பெரிது. மூர்த்திகளையே சிருஷ்டித்துத் தந்திருக்கிறார் அவர். அவருக்கு மிக்க நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அன்பர்கள் இந்தப் புத்தகம் வேண்டும் வேண்டுமென்று பல முறை எழுதி வற்புறுத்தினார்கள். அவர்களுக்கும் பிறருக்கும் இந்தப் புத்தகம் உவப்பாக இருக்கும் என்று நம்புகிறேன்.

10-5-57 கி. வா. ஜகந்நாதன்

## பொருள் அடக்கம்

# சூரியன்

நீ ஒளி, நீ சுடர், நீ விளக்கம், நீ காட்சி.
மின்னல், இரத்தினம், கனல், தீக்கொழுந்து -
இவை எல்லாம் நினது திகழ்ச்சி.
கண் நினது வீடு.
புகழ், வீரம் - இவை நின்து லீலை.
அறிவு நின் குறி, அறிவின் குறி நீ.
நீ சுடுகின்றாய், வாழ்க! நீ காட்டுகின்றாய், வாழ்க!
உயிர் தருகின்றாய்; உடல் தருகின்றாய்.
வளர்க்கின்றாய்; மாய்க்கின்றாய்.
நீர் தருகின்றாய்; காற்றை வீசுகின்றாய். வாழ்க!

—பாரதியார்

உலகுக்கே கண்ணாகவும் கண்கண்ட தெய்வமாகவும் விளங்குபவன் கதிரவன். அவனுடைய புகழை உலகில் இதுகாறும் வாழ்ந்திருந்த மக்கள் பலவகையில் விரித்துப் பேசி யிருக்கின்றனர். வேதம் அவனை வாழ்த்துகின்றது. வேதாங்கங்களில் கண்ணைப்போன்ற சோதிட நூல் அவனையே நடுநாயகமாகக் கொண்டு வழிபடுகிறது. இதிகாசங்களும் புராணங்களும் சூரியனுடைய புகழையும் வரலாற்றையும் பல வகையில் எடுத்துச் சொல்கின்றன. சூரியனைப்பற்றிய மந்திரங்களும் துதிகளும் பல உண்டு. அவனுடைய உருவ வருணனை, செயல்கள், அவனை வழிபடுவதனால் உண்டாகும் பயன்கள் ஆகியவற்றைப்பற்றிய செய்திகள் பல, வடமொழி நூல்களில் வந்திருக்கின்றன.


சூரியன்

தமிழிலும் செங்கதிரவனைப் புகழும் பாடல்கள் பல உண்டு. சங்க காலப் புலவர் முதல், நம் காலத்தில் வாழ்ந்த பாரதியார் வரையில் அவனைப் பாடியிருக்கிறார்கள்.

சூரியனையே முழு முதற் கடவுளாகக் கொண்டு வழிபட்ட சமயம் ஒன்று இருந்தது. அதற்குச் சௌரம் என்று பெயர். இன்றும் உலகத்தில் சில நாட்டினர் ஞாயிற்றை வழிபட்டு வருகின்றனர். கணித வகையில் சூரியனைத் தலைமையாக வைத்துக் கணிக்கும் முறைக்குச் சூரிய சித்தாங்

தம் என்ற பெயரும் அவ்வகை அளவுக்குச் சௌரமானம் என்ற பெயரும் வழங்குகின்றன.

விஞ்ஞானிகள் சூரியமண்டலத்தைப்பற்றியும் சூரியனுடைய கிரணங்களைப்பற்றியும் செய்துள்ள ஆராய்ச்சிக்குக் கணக்கு வழக்கே இல்லை. இன்னும் செய்துகொண்டே வருகின்றனர்.

கவிஞர்கள், சூரிய உதயத்தையும் சூரிய அஸ்தமனத்தையும் காவியங்களினிடையே அழகுபெற வருணித்திருக்கிறார்கள். வடமொழி, தென்மொழி நூல்களில் இப்படி அமைந்த வருணனைகள் மிகப் பல. காவியத்துக்கு உறுப்பென்று, அலங்கார இலக்கணம் வரையறுத்துக் கூறுவனவற்றுள் சூரிய உதயமும் சூரிய அஸ்தமனமும் சேர்ந்தவை.

பாரத நாட்டில் உள்ளவர்களுக்கு மட்டுமன்றி மற்ற நாட்டில் உள்ளவர்களுக்கும் சூரியன் சிறப்புடையவன். அவனைப்பற்றி அந்த அந்த நாடுகளில் வழங்கும் கதைகளும் வழிபாட்டு முறைகளும் எண்ணிக்கையில் அடங்குவன அல்ல. கதிரவனுடைய கதிர்களைப்போல அவனுடைய புகழ் பரந்திருக்கிறது; அவனைப் பாடாத மொழி இல்லை; வணங்காத மக்கள் இல்லை.

## 2

சூரியனைப்பற்றிய மந்திரங்கள் வேதத்தில் பல இடங்களில் வருகின்றன. ரிக்வேதம் மூன்றுவித அக்கினிகளில் ஒருவனாகக் கதிரவனை வருணிக்கிறது. அவனுக்கு ஏழு பெயர்கள் உண்டு. ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரணத்தால் வந்த பெயர். இருளை அழித்து, ஒளியுடன் பகலைத் தருவதால் சவிதா என்ற பெயரும், உலகையெல்லாம் தன் ஒளியால் ஒளிரச் செய்வதால் பகன் என்ற பெயரும், ஒளியினால் இருளைப் போக்கிப் பூமியை உரமுடைய தாக்குவதால் பூஷா என்ற பெயரும், தன் கதிர்களால் மூவுலகங்களையும் அளப்பதால் விஷ்ணு என்ற பெயரும், இரவில் தன் கதிர்களாகிய ரோமத்தை மடக்கிக்கொண்டு செல்வதால் கேசி என்ற பெயரும், உலக முழுவதும் உள்ள மக்கள், ஒருங்கே புகழ்வதால் வைசுவாநரன் என்ற பெயரும், செவ்வொளி படைத்த காளையாக வானில் ஏறுவதால் விருஷாகபி என்ற பெயரும் பெறுகிறான். உதயத்துக்குமுன் உஷையையும், நண்பகலில் சூர்யாவையும், மறைந்தபின் விருஷாக பாயியையும் தன் மனைவிகளாகக் கொள்கிறான். அவனுக்குரிய தேவதைகள் அசுவினி தேவர்கள்.[1]

யஜுர்வேதத்தில் பல இடங்களில் சூரியனின் புகழ் வருகிறது. ஓர் அநுவாகத்தில், 'நீ வெற்றியுடையாய்; எல்லாவற்றையும் காண்பவன்; சோதியை ஆக்குபவன்; எவ்வுலகையும் ஒளிரச் செய்கிறவன்' என்ற சூரியனுடைய பெருமையைக் காணலாம்.[2]

---

1. வேதசந்திரிகை: எம். ஆர். ஜம்புநாதன் எழுதியது; பக்கம் 57-58.
2. யஜுர்வேதம்: அநுவாகம், 73.

'நாங்கள் இருளுக்கு அப்பால் உயரிய ஒளியைப் பார்ப்பவர்களாய், சூரியனிடம் வந்துள்ளோம். அவன் தேவர்களின் தேவனுவான். அவன் உயரிய சோதியாவான்.'

''சூரியனுக்குச் சமானமான சோதியுள்ளவன் யார்?''

'அவனுடைய குதிரைகள் ஒரு சமயம் ஒளியும் மற்ருெரு சமயம் இருளுமான ஆற்றலைத் தாங்கியுள்ளன.'

'சூரியனே! நீ மகான்; ஆதித்தியனே! நீ பெரியவன்; நீ பெரியவனுக இருப்பதால் நின் பெருமை போற்றப் பெறுகின்றது.'[1] இவ்வாறு செங்கதிரோன் பெருமையை யஜுர்வேதம் பேசுகிறது.

சாம வேதத்தில் வரும் சூரியனைப்பற்றிய மந்திரங்களில் சிலவற்றின் கருத்து வருமாறு:

'ஆதித்தியர்களே! நோயை நீக்குக. இன்னல் புரியும் பகைவரை ஓட்டுக! கெடுமதி உடையவனையும் அழிப்பீர்களாக! எங்களைத் தீவினையினின்றும் நீக்குக!'

'ஆயிர மக்களால் காணப்படுபவன். கவிகளுக்கு அறிவாக நிற்பவன், சோதி வடிவினன் சூரியன்; இவன் இருளை நீக்கி ஒளி உதயத்தைப் புகுத்துகிருன். சந்திரனேடு ஒன்றுகிருன்.'

'சூரியன் வாயுவினுல் தூண்டப் பெற்று, மக்களைப் பாதுகாக்கிருன்; வளம் தருகிருன்; பல வகையில் ஒளி செய்கிருன். இயங்குவனவும் நிற்பனவுமாகிய அனைத்திற்கும் ஆன்மாவான சூரியன், வானத்தையும் வையத்தையும் தன் ஒளியால் நிரப்புகிருன். எல்லாவற்றையும் விளக்கும் சூரியனுக்கு முன், திருடர்களைப்போல் தம் கதிர்களை அடக்கிக்கொண்டு, நட்சத்திரங்கள் மறைந்துவிடுகின்றன.'

'சூரியனே! நீ நோய்களைப் போக்குபவன். எல்லா ஒளி உலகத்தையும் ஒளிரச் செய்து, எழில் கனிந்த பொருள் அனைத்தையும் விளக்கம் அடையச் செய்கிருய். அமரரும் ஞானியரும் மக்களும் எங்கும் பரவும் சோதியைக் காணும் வண்ணம் நீ உதயமாகிருய். சூரியனே! நீ உன் ஆற்றலால் எங்கள் வாழ்நாளை இன்பமுடைய தாக்கி, உயிர்க்கூட்டங்



ஹரிச்சந்திரபுரத்தில் உள்ள சூரியன் - உற்சவ விக்கிரகம்

1. யஜுர்வேதம்: எம். ஆர். ஜம்புநாதன் மொழிபெயர்ப்பு.

களை ஒளிரச்செய்து, வானத்தையும் ஈனந்தலை உலகத்தையும் அடைகிருய்.'

'சோதிகளிற் சிறந்த சோதி, உத்தமன், உலகை வெல்பவன், செல்வம் எய்துபவன், பெரியவன், உலகம் முழுதும் ஒளிர்பவன், ஒளி வீசுபவன், மகான் ஆன சூரியன் காட்சிக்குப் பரந்தவனுக இருந்து, அழிவற்ற வெற்றியையும் தேசாகிய பலத்தையும் விரிக்கிருன்.'[1]

அதர்வ வேதம், இருதய நோயையும் காமாலையையும் போக்கச் சூரியனை வழிபடும் விதத்தைச் சொல்கிறது. பசுவின் அகத்தில் உள்ள புழுக்களைச் சூரியன் ஒழிப்பான் என்று கூறுகிறது.[2]

மந்திரங்களுக்கெல்லாம் தாயென்ற சிறப்பையுடைய காயத்திரிக்குத் தெய்வம் ஸவிதாவாகிய சூரியன். அந்த மந்திரம் சைவர், வைஷ்ணவர் என்ற வேறுபாடின்றி யாவராலும் ஜபிக்கப் பெறுகிறது.

## 3

வால்மீகி ராமாயணத்தில் கதிரவனுடைய துதியாகிய ஆதித்திய ஹ்ருதயம் என்ற பகுதி ஒன்று இருக்கிறது. ராவணனேடு போர் செய்த ராமர், சோர்வை அடையாமல் இருக்கும்பொருட்டு அகத்திய முனிவர் தோன்றி, அவருக்கு ஆதித்திய ஹ்ருதயத்தை உபதேசித்தார். அந்த மந்திரத்தின் பெருமையை, 'பகைவர் அனைவரையும் வெல்வதற்குரிய ரகசியத்தைக் கேட்பாயாக. ஆதித்திய ஹ்ருதயம் என்ற பெயரையுடைய இந்த மந்திரம் வெற்றியைத் தருவது; குறைவற்ற பயனை அளிப்பது; மிகத் தூய்மையானது; எல்லாப் பாவங்களையும் நாசம் செய்வது; மனக்கவலையையும் உடற்பிணியையும் போக்குவது' என்று விரித்துச் சொல்லிப் பின் அந்த மந்திரத்தை உபதேசம் செய்தார். அந்தத் துதியில் கதிரவனுடைய பெருமைகள் விரிவாக வருகின்றன. ஆதித்தியன், ஸவிதா, சூர்யன், ககன், பூஷா, கபஸ்திமான், ஸ்வர்ண ஸத்ருசன், பானு, ஹிரண்ய ரேதஸ், திவாகரன், ஹரிதசுவன், ஸஹஸ்ரார்ச்சிஸ், ஸப்தஸப்தி, மார்த்தாண்டன், பாஸ்கரன், ரவி, வியோமநாதன், பிங்களன், கவி, மகாதேஜஸ், லோகஸாக்ஷி என்பன போன்ற திருநாமங்கள் பல சொல்லப் பெறுகின்றன, அவற்றிலிருந்து கதிரவனைப்பற்றிய செய்திகள் பலவற்றை உணர்ந்துகொள்ளலாம். அதிதியின் புதல்வன், உலகை உண்டாக்குபவன், மக்களைச் செயல் செய்யுமாறு தூண்டுபவன், வானவெளியில் உலாவுபவன், மழையால் உலகைப் புரப்பவன், கதிர்களை உடையவன், பொன்வண்ணமுடையவன், ஒளியை உடையவன், பகலைச் செய்பவன், பசும் புரவிகளை உடையவன், ஆயிரங் கதிரோன், ஏழு குதிரைகளை உடையவன், இருளை அழிக்கும் கதிர்களைப் பெற்றவன், அழிந்தவற்றை ஆக்குபவன், வழிபடுவோர் உள்ளம் குளிரச்செய்பவன், மாலையில் வெம்மை அடங்குபவன், பனியை அழிப்பவன், வானத்தின் மன்னன், வேதங்களின் கரையைக் கண்டவன்,

1. ஸாமவேதம்: எம். ஆர். ஜம்புநாதன் மொழிபெயர்ப்பு.
2. அதர்வ வேதம்: எம். ஆர். ஜம்புநாதன் மொழிபெயர்ப்பு; ப. 18, 56.



ராமனுக்கு அகஸ்தியர் உபதேசித்தல்

நீருக்கு நண்பன், வட்ட வடிவினன், தாமரையை மலர்த்துகிறவன், அளவற்ற திருவுருவத்தை உடையவன், உருக்கிய பொன்னைப் போலப் பொலிபவன், உலகுக்கு ஒரு சான்ருக நிற்பவன் என்பவை முதலிய இயல்புகள் அந்தப் பெயர்களால் தெரியவருகின்றன.

'இந்தக் கடவுள் ஊழிக் காலத்தில் உலகத்தை அழிக்கிருர். மீட்டும் ஆக்குகிருர். இவர் காக்கும் தெய்வம். இவர் எல்லாவற்றையும் வற்றச் செய்கிருர்; எரித்து விடுகிருர். தம் கதிர்களால் மழையைப் பொழியவைக்கிருர். எவ்வுயிரும் உறங்குகையில் இவர் அந்தர்யாமியாக இருந்து, விழித்திருக்கின்ருர். இவரே வேள்வி; வேள்வியின் பயனும் இவரே. வேதங்களும் இவ்வுலகில் நிகழும் அனைத்தும் கதிர்க் கடவுளே' என்று அகத்தியர் ராமபிரானுக்குக் கதிரவன் பெருமையை எடுத்துக் கூறுகிருர்.

இந்த ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்திரத்தை இன்றும் பலர் பாராயணம் செய்து வருகின்றனர்.

ராமர் பிறந்த ரகுவம்சமே சூரியனை முதல்வனுக உடையது. சுக்கிரீவனை ஞாயிற்றின் சேய் என்று ராமாயணம் சொல்லும். பிரமனுடைய கண்ணீரிலிருந்து தோன்றிய இருக்ஷவிரசன் என்ற குரங்கு, பெண்குரங்காக மாறியபோது சூரியனுடைய தொடர்பு உண்டாகச் சுக்கிரீவன் பிறந்தான்.[1]

அநுமன் ஆதித்தனுடன் சென்று, நவ வியாகரணங்களையும் கற்ருன் என்பது ஒரு வரலாறு.

## 4

பாரதத்தில் சூரியன் காசியப முனிவருக்கும் அதிதிக்கும் உதித்தவன் என்ற செய்தி வருகிறது. அதிதியின் புத்திரனுதலின் ஆதித்தியன் என்ற பெயரைப் பெற்ருன். பன்னிரண்டு ஆதித்தர்களைப் பெற்றதாகவும்

1. அபிதான சிந்தாமணி, ப. 203.



சூரியன்: ஒரு பழைய ஓவியம்

சொல்வதுண்டு. ஒரு சூரியனே ஒவ்வொரு மாதத்திலும் வெவ்வேறு கோலம் பூண்பதனால் பன்னிரண்டு ஆதித்தர்களாகத் தோற்றுகிறான் என்று கொள்வது ஒரு மரபு.

தேவர்களுக்காக அமுதம் கடைந்த போது, ராகு மறைவாக வந்து, அமுதத்தை உண்டான். அதைக் கண்டு, சூரியனும் சந்திரனும் மற்றவர்களுக்குக் காட்டினார்கள். அப்போது ராகு துண்டிக்கப்பட்டான். அந்தக் கோபத்தால் சூரியனையும் சந்திரனையும் ராகு பீடிக்கத் தொடங்கினான். ராகுவினால் கிரகணம் அடைந்த கதிரவன், 'நான் அமரரின் பொருட்டுத்தானே ராகுவின் பகைமைக்கு ஆளானேன்? அவர்களுக்கு நன்மை செய்த எனக்கு இப்போது தீங்கு உண்டாக, அவர்களில் யாரும் ஏனென்று கேட்கவில்லை. இனி என் முழு வெம்மையையும் காட்டி, உலகை எரித்துவிடுகிறேன்' என்று சினங்கொண்டு மறைந்தான். அவன் மறைந்திருந்த போதிலும் உலகமெங்கும் ஆற்றுவதற்கரிய வெப்பம் உண்டாயிற்று. அதனை உணர்ந்த முனிவரும் தேவரும் பிரமதேவனிடம் சென்று முறையிட்டார்கள். பிரமதேவன் வெப்பத்தின் காரணத்தை உணர்ந்துகொண்டான். 'இப்போது இருக்கும் வெப்பம் பெரிது அன்று. இனிமேல் கதிரவன் உதயமானால் உலக முழுதும் வெந்து சாம்பலாகிவிடும். ஆனால் அப்படிச் சாம்பலாகும்படியான நிலை வரப்போவதில்லை. காச்யபருக்கு வினதையினிடம் பிறந்த அருணன், கதிரவன் கதிர்களைத் தாங்கிக்கொண்டு அந்த வெம்மையை மறைப்பான்' என்று கூறினான். அவ்வாறே அருணன் செங்கதிரோனுடைய தேர்முன் அமர்ந்து, அவனுடைய ஒளியைத் தான் இழுத்துக்கொண்டு மறைத்தான். அதனால் வெய்யோனுடைய வெம்மை தணிந்தது.[1]

துருவாசர் உபதேசித்த மந்திரத்தைப் பரீட்சிக்கும்பொருட்டு, கன்னியாக இருந்த குந்திதேவி, சூரியனை நினைந்து, அதை ஜபித்தாள். உடனே பானுமூர்த்தி அவள்முன் தோன்றி, அவள் கன்னிமையை மாற்றி, அளவளாவினான். அப்போது கர்ணன் பிறந்தான். கதிரவன் அவளை மீண்டும் கன்னி ஆக்கிச் சென்றான். கர்ணன், சூரியன் புதல்வனதலின் அக்கதிரவனுக்குரிய கவச குண்டலங்களுடன் பிறந்தான்.

1. மகாபாரதம், ஆதிபர்வம், 24-ஆம் அத்தியாயம்.

பாகவதத்தில் சூரியனைப்பற்றிய செய்திகள் பல உள்ளன. சூரியன் மேருமலையை வலம் வருகிறான். அவன் கிரகங்களுக்கும் நட்சத்திரங்களுக்கும் தன் சுடரை வழங்குகிறான். மழை, பனி, வெப்பம் ஆகியவற்றை அவன் உண்டாக்குகிறான். அவனுடைய தேருக்கு ஒற்றைச் சக்கரம். அதற்குப் பன்னிரண்டு ஆரக்கால்கள். அந்தத் தேரில் வேதத்தின் ஏழு சந்தங்களும் ஏழு பரிகளாக இருக்கின்றன. அவனுடைய தேரில் அங்குஷ்டப் பிரமாணம் உள்ள வாலகில்லியர் என்ற முனிவர் அறுபதினாயிரம் பேர் இருந்து சூரியனைத் துதிப்பார்கள். புலத்தியர் முதலிய பன்னிரண்டு பேர்கள், மாதத்துக்கு ஒருவராக அவனைத் துதிப்பார்கள், வாசுகி முதலிய நாகங்களில் ஒவ்வொன்று ஒவ்வொரு, மாதத்தில் சூரியன் தேரை இழுத்துச் செல்லும். அத்தேரைச் சுற்றிச் சில அரக்கர் திரிவர்; கந்தருவர் பாடுவார்கள்; அரம்பையர் ஆடுவர். மும்மூர்த்திகளின் அமிசமாகவும் சூரியன் திகழ்கிறான்.[1]

வையகம் படைத்தல்செய் மலரின் அண்ணலும்
பொய்யறு மாயனும் புகல்முக் கண்ணனும்
ஐயசெங் கதிர்களோர் ஆயி ரந்திகழ்
வெய்யவ னும்என விளம்பும் நூல்களே.

மார்க்கண்டேய புராணம், பிரம புராணம் முதலிய புராணங்களிலும் தலபுராணங்களிலும் சூரியனைப்பற்றிய வரலாறுகள் பலபடியாகக் காணப்படுகின்றன.

இருள்மயமான அண்டத்தைப் பிரமன் பிளந்தபோது, ஓம் என்ற ஒலி உண்டாயிற்று. அந்த ஒலியிலிருந்து தேசோமயனான சூரியன் தோற்றினான் என்று மார்க்கண்டேய புராணம் கூறும்.

சிவாகமங்கள், சிவபெருமான், சூரிய மண்டலத்தின் நடுவே ஒளிர்கிறாரென்றும், சூரியனாகவே விளங்குகிறாரென்றும், அவருக்குரிய அட்டமூர்த்தங்களில் ஒன்று சூரியனென்றும் சூரியனை வலக்கண்ணாக உடையவர் என்றும் சொல்கின்றன. சூரியனாக விளங்கும்போது, சிவசூரியன் என்ற திருநாமத்தோடு சிவபெருமான் விளங்குகிறார். சிவசூரியன் நான்கு முகம், எட்டுத் தோள், சிவந்த ஆடை ஆகியவற்றை உடையவன்.

சூரியனுக்குப் பல மனைவியர் இருப்பதாகப் புராணங்கள் கூறும். சம்ஞா தேவியிடம் பிறந்தவர்கள் வைவச்சுத மனு, யமன், யமுனை, அச்வினி தேவர்கள்; சாயாதேவியினிடம் பிறந்தவர்கள் சனி, சாவர்ணி மனு, தபதி என்னும் பெண்; சருஷிணி என்னும் மனைவியிடமாகப் பிருகு, வால்மீகர் என்போர் பிறந்தனர். ஊர்வசியின்மேற் காதல் உண்டானபோது தோன்றியவர் அகத்தியர், வசிட்டர்.[2]

## 5

தமிழ் நூல்களிலிருந்து கதிரவனுடைய வழிபாட்டைப்பற்றிய செய்திகள் பல கிடைக்கின்றன. தொல்காப்பிய உரையில் பேராசிரியர், சூரியனுடைய துதியாக இரண்டு செய்யுட்களைக் காட்டுகிறார்.

---

1. பாகவதம், 5-ஆம் அத்தியாயம். 2. அபிதான சிந்தாமணி, ப. 721, 722.

'உலகங்களையெல்லாம் படைத்த பிரமன் முதலிய தேவர்களை வெளி யாக்கினவன் நீ ஆதலால், பருதியஞ் செல்வனே, நின் திருவுள்ளத்தில் உள்ள அருள், எங்களிடமிருந்து நீங்காமல் இருக்கட்டும்' என்று ஒரு பாடல் சொல்கிறது.

அண்டங்கள் பலபயந்த அயன்முதலாம் இமையோரைக்
கொண்டங்கு வெளிப்படுத்த கொள்கையை ஆகலின்
ஓங்குயர் பருதியஞ் செல்வ! நின்
நீங்கா உள்ளம் நீங்கன்மார் எமக்கே.[1]

மற்றொரு செய்யுள், 'கதிரவன் மனக்கமல மலரையும் மலர்த்துபவன்' என்று சொல்கிறது. அவனே இருளையும் ஒளியையும் வெளிப்படுத்து பவன். நட்சத்திரங்களைப் பகலில் தன்பால் மறைத்துக்கொண்டு, இரவில் வெளிப்படுத்துகிறான். சந்திரனை ஒளி உடையவனாகப் படைத்தவனும் சூரியனே. இவ்வாறு கதிரவன் புகழை விரிவாகப் பாடுகிறது.

நீராகி நிலம்படைத்தனை; நெருப்பாகி நீர்பயந்தனை;
ஊழியிற் காற்றுஎழுவினை; ஒளிகாட்டி வெளிகாட்டினை

என்று ஐம்பெரும் பூதங்களுக்கும் ஆதாரமாகவே சொல்கிறது.

சிலப்பதிகாரத்தில், தொடக்கத்திலேயே இளங்கோவடிகள் சந்திரனையும் சூரியனையும் வாழ்த்துகின்றார்.

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்

என்பது கதிரவனை வாழ்த்திய பாடல்.

கண்ணகி, தன் கணவனாகிய கோவலன், அரசியின் சிலம்பைத் திருடிய கள்வனென்று குற்றம் சாற்றப்பெற்றுக் கொலையுண்டதை அறிந்து, வருந்தி, எல்லாவற்றிற்கும் சாட்சியாக இருக்கும் கதிரவனைப் பார்த்து, "காய் கதிர்ச் செல்வனே! கள்வனோ என் கணவன்?" என்று கேட்டாள். உடனே சூரியன் குரல் அசரீரியாகக் கேட்டது;

'கள்வனோ அல்லன்; கருங்கயற்கண் மாதராய்
ஒள்ளெரி உண்ணுமிவ் வூர்[2]

என்பது அக்குரல்.

சூரியனைப் பாலை நிலத்துக்குத் தெய்வமாகக் கொள்வது ஒரு சாரார் கொள்கை. 'மழையையும் காற்றையும் தருகின்ற ஞாயிறு பாலைக்குத் தெய்வமாயினமை'[3] என்று நச்சினார்க்கினியர் ஓரிடத்தில் எழுதுகிறார்.

கனைகதிர்க் கனலியைக் காமுறல்
வளிதரும் செல்வனை வாழ்த்தவும்[4]

என்ற கலித்தொகை அடிகளிலிருந்து சூரியனை வழிபடும் வழக்கம் இருக்

1. தொல்காப்பியம், செய்யுளியல், பேராசிரியர் உரை, மேற்கோள்: 'தடங் கடற் பூத்த.'
2. சிலப்பதிகாரம், 18: 52-3.
3. கலித்தொகை, 16: 16, உரை.
4. கலித்தொகை, 16.


'கள்வனோ என் கணவன்?'

தமை தெரியவருகிறது. கதிரவனை வணங்கி, ஏதேனும் வேண்டிக்கொண்டால் அது நிறைவேறும் என்ற கருத்துத் தமிழர்களுக்கு இருந்து வந்தது.

மருஅ அரைச[1]

என்று கலித்தொகையில் வரும் பகுதிக்கு, நச்சினார்க்கினியர், 'உலகத்தார் வேண்டிக் கொண்ட காரியங்களை மருத ஞாயிறே' என்று எழுதிய உரையிலிருந்து இதனைத் தெளியலாம்.

வெங்கதிரோனுடைய வெம்மை முழுவதும் அப்படியே உலகில் சார்ந்தால் உயிர்கள் அதனைப் பொறுக்க முடியாது. ஆதலின் அதன் வெம்மையைக் கருணையினால் சில அவிர்சடை முனிவர் தாங்கிக்கொள்கின்றனர். அதனால் ஆதித்தனுடைய கதிர்கள் உலகம் தாங்கும் அளவுக்குப் படிகின்றன. இந்த முனிவரையே வாலகில்யர் என்று கூறுவர். இவர்கள் சூரியனுடனே உலவி வருவார்கள். காற்றையே உணவாக உடையவர்கள். இவர்களை, 'விண்செலல் மரபின் ஐயர்' (107) என்று திருமுருகாற்றுப்படையும், 'சுடரொடு திரிதரு முனிவர்' (12) என்று சிலப்பதிகாரமும் குறிப்பிடுகின்றன. தாமப்பல் கண்ணனார் பாட்டு ஒன்றில் சற்று விரிவாகவே இவரைப்பற்றிய செய்தி வருகிறது:

நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கி
கால்உண வாகக் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவரும். —புறநானூறு, 34

## 6

நேரே வழிபடுதலும், உருவம் அமைத்து வழிபடுவதும், யந்திரத்தில் ஆவாகனம் செய்து பூசித்தலும், நிலத்தில் உரு எழுதி ஆராதித்தலுமாகச் சூரிய வழிபாடு பல வகைப்படும். சூரியனுக்குத் தனியே கோயில் உண்டு. சிவாலயத்தில் பரிவார தேவதைகளில் ஒன்றாகவும் வைத்துப் பூசை செய்வார்கள். நவக்கிரகங்களில் ஒன்றாகச் சூரியனை வைத்து, வலம் வந்து

1. கலித்தொகை, 147: 48.

வணங்கும் வழக்கத்தை யாவரும் அறிவார்கள். தை மாதப் பிறப்பாகிய மகர சங்கராந்தியன்று சூரியன் உருவை நிலத்தில் எழுதிப் பூசை புரியும் வழக்கம் இன்றும் இந்நாட்டில் இருந்து வருகிறது. சூரியனைச் சூரிய நாராயணன் என்று பாராட்டுவர். அவன் திருமாலின் அம்சம் என்பதே காரணம்.

தமிழ் நாட்டில் சூரியனுக்குத் தனியே கோயில்கள் இருந்தன. காவிரிப் பூம் பட்டினத்தில் சூரியன் கோயில் இருந்தது. அதை இளங்கோவடிகள் 'பகல்வாயில், உச்சிக் கிழான் கோட்டம்'[1] என்று சொல்கிறார். 'கீழ்த் திசையில் உள்ள சூரியன் கோயில்' என்பது இதன் பொருள்.

சோழ நாட்டில் சூரியனார் கோயில் என்ற தலத்தில் சூரியனுக்குத் தனிக் கோயில் உண்டு. ஒரிஸ்ஸாவில் கோணார்க் (கோணார்க்கம்)[2] என்னும் இடத்தில் கதிரவன் கோயில் இருக்கிறது.

சூரியனுடைய திருவுருவத்தைக் குறிக்கும் தியான சுலோகங்கள் சில உண்டு. அவற்றிலிருந்து சூரிய மூர்த்தியின் உருவ இயல்பை அறியலாம். விஷ்ணு புராணம் முதலியவற்றிலும் இந்த வருணனையைக் காணலாம். அந்த வருணனைகளில் சில வேறுபாடுகள் இருக்கும். 'நவக்கிரக ஆராதனம்' என்ற வடமொழி நூலில் உள்ளவை வருமாறு:[3]

சூரியன் சிவந்த வண்ணமுடையவன். செம்மலரைச் சூடியிருப்பான். செம்மலர் மாலையும் செவ்வாடையும் அணிந்திருப்பான். செந்நிறக் குடையும் கொடியும் கொண்டு, ஒளி வீசும் தேரில் ஏறி வருவான். பதுமாசனத்தில் கிழக்கு முகம் நோக்கி, இரு புஜங்களை உடையவனாய்த் தாமரை மலரை ஏந்தி வீற்றிருப்பான். கடகமும் குண்டலமும் அணிந்திருப்பான்.

நவக்கிரகக் குழுவில் நடுவே, வட்டவடிவமான மண்டலத்தில் ஆவாகனம் செய்யப் பெறுவான்.

சூரியனுக்கு அதிதேவதை அக்கினி; அக்கதிரோனுக்கு வலப்பக்கத்தில் மேஷவாகனத்தின்மேல் மூன்று கைகளும் மூன்று கால்களும் உடையவனாக எழுந்தருளியிருப்பான்.

சூரியக்கிரகத்தின் பிரதியதிதேவதை ருத்திரன். சூலமும் தமருகமும் தாங்கிய இரண்டு கரங்களுடன் சூரியனுக்கு இடப்பக்கத்தே இருப்பான்.

விஷ்ணு புராணம், 'மங்களமான முகரோமங்களை உடையவன்; மாலையும் ஆடையும் செம்மைநிறம் உடையவை; ஒளிபடரும் முகம்; நான்கு கை; கவசம் அணிந்திருப்பான்; இடக் கையைத் தண்டி என்னும் ஏவலாளன்மேலும், வலக்கையைப் பிங்களன் என்பவன்மேலும் வைத்திருப்பான். மற்ற இரண்டு கரங்களில் கேடயமும் சூலமும் தாங்குவான். அவன் கொடி, சிங்கம்' என்று சூரியனை வருணிக்கிறது.

---

1. கனாத்திறம் உரைத்த காதை, 10 - 11.
2. எகிப்தில் 'கார்நாக்' என்ற இடத்தில் சூரியன் கோயில் ஒன்று இருக்கிறது.
3. இதையே ஆதாரமாகக் கொண்டு ஓவியர் ராஜம், படத்தை வரைந்திருக்கிறார்.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவராகிய ஸ்ரீ முத்துசாமி தீட்சிதர் நவக்கிரகங்களின்மேல் ஒன்பது கீர்த்தனங்கள் இயற்றி யிருக்கிறார். ஒவ்வொரு பாட்டி லும் அந்த அந்தக் கிரக வரு ணனையும் மந்திரமும் வழிபாட் டின் பயனும் அமைத்திருக் கிறார். 'சூர்ய மூர்த்தே நமோஸ் துதே' என்று தொடங்கும் கீர்த்தனம் கதிரவனைப்பற்றி யது. 'சூரியன், சாயா தேவியின் கணவன். காரிய காரண ரூப மாக இருப்பவன். உலகத்துக்கு ஒளியை வழங்குபவன். சிங்க ராசிக்கு அதிபதி. உயர்ந்தோர் போற்றும் ஒளிப் பிழம்பான வன். உடல் நலத்தை அருள் பவன். தாமரைக்கு நண்பன். உலகத்துக்கு மித்திரன். ஆயிரங் கதிருடையவன். கர்ணனைப் பெற்றவன், கொடிய பாவத் தைப் போக்குகிறவன். அக்கினி உருவுடையோன். குரு குகருக்கு மகிழ்ச்சியைத் தருபவன். சுயம்பிரகாசன். ஞானிகளாற் புகழப் பெறுபவன். பகலை விரிக்கும் மாணிக்கம் அனையவன். கிரகங் களுக்குள் சிறந்தவன். ஆண்மையுடையோரின் பூசனையைப் பெற்றவன். மக்கள் செய்யும் செயல்களுக்கெல்லாம் சான்றாக இருப்பவன். ஒளியு டைய ஏழு குதிரைகளைப் பூட்டிய தேரை உடையோன். சூரியாஷ்டாட் சர மந்திர ஸ்வரூபி. பொன்னிற மேனி உடையவன். பிரம்மா, விஷ்ணு, சிவனென்னும் மும்மூர்த்திகளின் உருவமாய் இருப்பவன். புத்தியையும் முக்தியையும் அளிப்பவன்' என்பவை தீட்சிதர் கீர்த்தன விஷயங்கள்.


சூரியன்: வேறு ஒரு பழைய ஓவியம்.

இந்தக் கீர்த்தனத்தை ஒவ்வொரு நாளும் அன்போடு பாடினால் எல்லா நலமும் கிடைக்கும் என்ற பயனையும் தீட்சிதர் சொல்லியிருக்கிறார்.

சூரிய நமஸ்காரத்துக்குரிய மந்திரம் தனியே உண்டு. அதனால் கதிரவனை வழிபட்டால் கண் ஒளி பெருகும் என்பர். 'கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரமா?' என்ற பழமொழி இதைக் குறிக்கிறது.

மயூரகவி என்ற வடமொழிப் புலவர் 'சூரிய சதகம்' பாடிக் கண் பெற்றார் என்பது கர்ண பரம்பரையான செய்தி.

வாழி பகல்செய்வோன் வாழி ஒளிஉருவன்
வாழியோர் ஆழித்தேர் மன்னுசுடர்-வாழியரோ
ஞாலம் விழிதிறப்ப நல்லோர் புகழுரைப்பக்
காலம் விளக்கும் கதிர்.

# சந்திரன்

பொருந்த வான்உறை நாள்களை நாள்தொறும் புணர்வோன்
அருந்த வானவர்க் காரமு தன்புடன் அளிப்போன்
திருந்த வானவர்க் கரியவன் செஞ்சடை முடிமேல்
இருந்த வானவன் பெருமையை யார்கொலோ இசைப்பார்?
செம்பொன் மால்வரை மத்தினிற் பணிவடம் பிணித்திட்டு
உம்ப ரானவர் தானவ ருடன்கடைந் திடவே
தம்ப மானதும் அன்றிஅத் தழல்விடம் தணிய
அம்பு ராசியின் ஆரமு துடன்அவ தரித்தோன்.

*—வில்லிபுத்தூரார் பாரதம்.*

நவக்கிரக மண்டலத்தில் சூரியனுக்கு அடுத்தபடி வருபவன் சந்திரன். சூரியனையும் சந்திரனையும் சேர்த்து வழங்குவது மரபு. வெங்கதிரோன் என்று சூரியனைச் சொல்லுவர்; சந்திரனைத் தண்கதிரோன் என்று கொண்டாடுவர். உணவு, பயிர், அமுதம், இன்பம், கவிதை, காதல், தண்மை, பாற்கடல், குமுதமலர், சோமலதை, கள், பெண் ஆகிய இன்பப் பொருள்களோ டெல்லாம் தொடர்புடையவன் சந்திரன். அவனை விரும்பாத மக்களே இல்லை. அவனுக்கு லோகப்பிரியன் என்று பெயர் இருக்கிறது.

யாவரும் விரும்பும் சந்திரன் அழகன்; பெண்டிர் உள்ளம் கவர்பவன். அவனைக் குழந்தைகள் முதல் கிழவர் வரையில் யாவரும் விரும்புகிறார்கள். அவனிடமிருந்து வரும் அமுதத்தை அமரர் நுகர்கின்றனர்; பிதுர்த் தேவதைகள் உண்ணுகின்றனர். அவனால் பயிர்கள் வளர்கின்றன; கடல் பொங்குகிறது; கவிதை உணர்ச்சி ஊறுகிறது. பாட்டி சொல்லும் கதையில் அவன் எல்லோருக்கும் பிரியமானவனானதற்கு ஒரு காரணம் கற்பனையாக வருகிறது. குழந்தைகளின் உள்ளத்தைக் குளிரவைக்கும் கதை அது.

ஆண்டு முதிர்ந்த அன்னை ஒருத்திக்கு நான்கு குழந்தைகள் இருந்தார்கள். சூரியன், சந்திரன், வருணன், வாயு என்ற அந்த நான்கு பேர்களும் ஒரு நாள் ஒரு செல்வர் வீட்டில் நடந்த விருந்துக்குப் போனார்கள். அவர்கள் விருந்துக்குப் புறப்படும்போது அன்னை அவர்களிடம், "அங்கே பரிமாறும் பட்சணங்களில் ஏதாவது எனக்குக் கொண்டுவாருங்கள்" என்று சொல்லி அனுப்பினாள்.

நான்கு பேரும் விருந்துண்ணச்



சந்திரன்.

சென்றுர்கள். விருந்தில் வடை, வாழைப்பழம், தித்திப்புப் பட்சணம் எல்லாம் போட்டார்கள். சந்திரன் அவற்றை இலையிலே போட்டுக் கொள்ளாமல் கையில் வாங்கி வைத்துக்கொண்டான். மற்ற மூன்று பேர்களும் எல்லாவற்றையும் தாமே தின்றுவிட்டார்கள். விருந்து முடிந்த பிறகு அந்த நான்கு பிள்ளைகளும் வீட்டுக்குப் போனுர்கள். அன்னை, "எனக்கு என்ன கொண்டுவந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"குழந்தைகளுக்குப் பட்சணமே போடவில்லை" என்று சூரியன் கையை விரித்தான். "கொஞ்சமாகத்தான் போட்டார்கள். நானே தின்றுவிட்டேன்" என்று வருணன் சொன்னுன். "நான் உனக்குக் கொண்டுவர வேண்டுமென்பதை மறந்துவிட்டேன்" என்று வாயு கூறினுன். சந்திரன் மட்டும் தான் கொண்டுவந்திருந்த பட்சணங்களை அம்மாவிடம் கொடுத்தான்.

அன்னைக்குச் சந்திரனிடம் இருந்த அன்பு பொங்கி வழிந்தது. "நீதான் அப்பா எனக்கு உகந்த பிள்ளை; உத்தமமான புத்திரன். மற்றவர்கள் எல்லாம் தங்கள் வயிறே பெரிதென்று எல்லாவற்றையும் தின்று ஏப்பம் விட, நீ எனக்காகப் பட்சணங்களை எடுத்து வந்தாயே! உன்னுல்தான் எல்லோருக்கும் நன்மை உண்டாகும். உங்கள் நாலு பேர்களில் உன்னைத் தவிர மூன்று பேர்களையும் உலகத்தார் வையட்டும். உன்னை மாத்திரம் எப்போதும் களிப்போடு வாழ்த்தட்டும்" என்று அவள் கூறினுள். அதனுல் தான் இப்போதும் சூரியன் முதலியவர்களைச் சில சமயங்களில் மக்கள் வைகிறுர்கள். கோடையில், "பாழும் சூரியன் கொளுத்துகிறுனே!" என்று சூரியனை வைவது உண்டு. அதிகமாக மழை பெய்தால், 'இந்த நாசகார மழை நிற்க மாட்டேன் என்கிறதே!" என்று வைகிறுர்கள். "இந்தப் பேய்க்காற்று நிற்குமா, நிற்காதா?" என்று வாயுவுக்கும் வசை கிடைக்கிறது. ஆனுல் சந்திரனை மாத்திரம் யாரும் வைவதில்லை. அதன் வரவை யாவரும் எதிர்பார்க்கின்றனர். சந்திரன் உதயமாகிவிட்டாலோ அதன் நிலவில் இன்பம் காணுகிறுர்கள். 'நிலா நிலா வாவா, நில்லாமல் ஓடிவா' என்று குழந்தைகள் குதூகலத்துடன் அவனை அழைக்கின்றன.

## 2

வேதங்களில் சந்திரனை ஸோமன் என்றும், சந்திரமா என்றும் குறிக்கிறுர்கள். சந்திரன் அமுதமயமானவன் என்றும், உலகில் உள்ள பயிர்களுக்கு வளர்ச்சி தருபவன் என்றும், ஸோமபானத்தை அருள்பவன் என்றும் வேதங்கள் சொல்கின்றன.

ஸோமனைப்பற்றி வேதங்களில் பல கதைகள் இருக்கின்றன.

ஸோமன் என்னும் அரசன் கந்தர்வனிடம் இருந்தான். அவனைத் தமக்கு நண்பனுகப் பெற்றுல் பல இன்பங்களை அடையலாமென்று தேவர்களும் முனிவர்களும் அவனை விரும்பினுர்கள். கந்தர்வனிடமிருந்து அவனை அழைத்துவரும் வழி என்ன என்று ஆராய்ந்தார்கள். வாக்கை மங்கையாக்கிக் கந்தர்வனை மயங்கச்செய்து, அவனிடமிருந்து ஸோமனைப் பெற்றுர்கள். இது ஐதரேயத்தில் வரும் கதை.



சூரியன் முதலிய நாலு பிள்ளைகள்

வானத்தில் இருந்த ஸோமனைக் காயத்திரியின் உதவியால் அமரர்கள் பூமிக்குக் கொண்டுவந்தார்களென்று சதபதப் பிராம்மணத்தில் ஒரு செய்தி வருகிறது,

தைத்திரீயத்தில் வேறு ஒரு கதை இருக்கிறது. பிரஜாபதிக்கு முப்பத்து மூன்று பெண்கள். அவன் அவர்களை ஸோமனுக்கு மணம் செய்து கொடுத்தான். அவர்களில் ரோகிணியிடம் மாத்திரம் ஸோமன் அன்பு வைத்து, மற்றவர்களைப் புறக்கணித்தான். அவர்கள் அதனால் சினம் கொண்டு, தம் தந்தையை அணுகி முறையிட்டார்கள். பிரஜாபதி ஸோமனைக் குறை கூறவே, அவன் யாவரிடமும் ஒத்த அன்புடன் இருப்பதாக உறுதி கூறினான். ஆனால் அவ்வாறு செய்யவில்லை. அதனால் உடல் குறைந்தவனானான். அப்பால் தன் மனைவியருடைய உதவியைக் கொண்டு செங்கதிரோனை அணுகித் தன் குறையினின்றும் நீங்கினான்.

தைத்திரீயத்தில் வேறு ஒரு கதை உண்டு. பிரஜாபதி மூன்று வேதங்களையும் வெளிப்படுத்தினான். அவற்றை ஸோமன் கைப்பற்றிக் கொண்டு சென்றுவிட்டான். பிரஜாபதிக்குச் சாவித்திரி என்றும் சிரத்தை என்றும் இரண்டு பெண்கள் இருந்தார்கள். ஸோமன் சிரத்தையை விரும்பினான். சாவித்திரியை விரும்பவில்லை. இந்தச் செய்தியைச் சாவித்திரி தன் தந்தையிடம் சென்று முறையிடவே பிரஜாபதி ஒரு வழி செய்தான். ஒரு பச்சிலைச் சாற்றினால் சாவித்திரியின் நெற்றியில் திலகம் இட்டு, ஸோமனிடம் செல்லுமாறு அனுப்பினான். அப்போது அவள் அழகு, ஸோமன் உள்ளத்தைக் கவர்ந்தமையால் அவன் அவளை வலிய வந்து காதலித்தான். தன்பால் இருந்த மூன்று வேதங்களையும் மீட்டும் பிரஜாபதியினிடம் அளித்துவிட்டுச் சாவித்திரியைக் கைப்பற்றிச் சென்றான்.[1]

1. ஸாமவேதம், முகவுரை: எம். ஆர். ஜம்புநாதன்.

ஸோமனாகிய சந்திரன் செல்வத்தை அளிப்பவன். வீரர்களிடம் எழுச்சியை உண்டாக்குபவன்.[1] தேவர்களுக்குத் தேவனாய் விளங்குகிறவன்.[2] தேவர்கள் ஸோமனைப் பருகுகிறார்கள்.[3] சோதியும் உலகமும் மலைகளும் செடி கொடிகளும் சூழ விளங்குபவன் அவன்.[4] இவ்வாறு யஜுர் வேதத்தில் ஸோமனுடைய புகழ் நிலவுகிறது. 'ஸோமனே! துதியை விரும்பும் வனஸ்பதியான நீ, நாங்கள் அழியாமல் இருக்கும்படி எங்கள் உயிரை வலிபெறச் செய்க. தேவர்களுக்குப் பிரமனாகவும் கவிகளுக்குத் தலைவனாகவும் அந்தணர்களுக்கு முனிவனாகவும் விலங்குகளுக்கு மகிஷனாகவும் கழுகுகளுக்குக் கருடனாகவும் காட்டுக்குக் கோடரியாகவும் விளங்குகிறாய். கானம் செய்கிறாய். தூய்மையிலே செலுத்துகிறாய்' என்று ஒரு மந்திரம் சொல்கிறது.[5] சுக்கில யஜுர்வேதத்தில் ஓரிடத்தில், 'ஸோமனே, இனியதும் மிக்க இன்பம் அளிப்பதுமாகிய தாரையுடன் நீ பாய்க. இந்திரன் நுகரும் வண்ணம் நீ அமுதம் பொழிகிறாய். நீ பகையை அழிப்பவன்; எல்லா மக்களுக்கும் நண்பன்' என்று பொருள் தரும் மந்திரங்கள் இருக்கின்றன.

'ஸோமனே, போரில் உன்னை வெல்ல முடியாது. போரிலே காப்பவன் நீ. எங்கள் இருக்கைக்குக் காவலன் நீ. வலிமைக்கும் உயிர்ப்புக்கும் துணைவன் நீ. பெரிய பொருளிலே புலப்படுபவன். நல்ல இடத்தை உடையவன். நற்புகழுடன் பகையை வெல்பவன்' என்றும், 'ஸோமனே, நீ இந்தப் பச்சிலைகள், இந்தப் பசுக்கள், இந்த நீர்நிலை ஆகியவற்றை உண்டாக்கினாய். அகல்வானத்தை விரிப்பவனும் நீதான். உன் சுடரால் இருளைப் போக்குகிறாய்' என்றும் அந்த மறை பாடுகிறது.[6]

## 3

புராணங்களில் சந்திரனைப்பற்றியுள்ள கதைகள் பல. இதிகாசமாகிய பாரதத்தில் பல இடங்களில் அவனைக் காண்கிறோம். சந்திரனைத் தம்முடைய குல முதல்வனாகப் பெற்றவர்கள் பாண்டவர்கள். வில்லிபுத்தூரார் ஆதிபருவத்தின் தொடக்கத்திலே சந்திரனுடைய புகழைப் பாடுகிறார் 'எங்கள் இறைவனாகிய திருமாலின் இருதயத்திலே பிறந்தவன்; நாள்தோறும் வானில் உள்ள நட்சத்திர மங்கையரைக் கூடிக் குலவுபவன்; வானவருக்கு அமுது அளிப்பவன்; சிவபெருமான் திருமுடிமேல் இருப்பவன்; பாம்புகளின் மூச்சுக் காற்றினால் மயங்கிக் கிடந்த பூமியைத் தன்னுடைய அமுத நிலவைப் பொழிந்து, வெப்பம் நீங்கித் தண்மையடையச் செய்தவன்; தேவர்கள் அமுது கடைந்தபோது, தூணாக நின்றதோடு, அதில் தோன்றிய ஆலகால விஷத்தின் கொடுமை

1. கிருஷ்ண யஜுர்வேதம்: அநுவாகம், 24.
2. ஷை, அநுவாகம், 32.
3. அநுவாகம், 43.
4. அநுவாகம், 129
5. அநுவாகம், 165.
6. அநுவாகம், 400.

தணியும்படி அக்கடலில் அமுதுடன் அவதரித்தவன்; பதினாறு கலைகளை உடையவன்; சூரியனிடத்தில் அக் கலைகளைக் கொடுத்து, மறுபடியும் பெற்றுக்கொள்பவன்; அத்திரி முனிவர் கண்ணிலும் அக்கினியிலும் தோன்றினவன்; வேதமந்திரங்களைச் சொல்லி, அந்தணர்கள் போற்றி வழிபடும் பெருமையை உடையவன்; புதன் என்னும் புதல்வனைப் பெற்றவன்' என்பவை அவர் பாடலால் அறியப்பெறும் செய்திகள்.[1]

அத்திரி முனிவர் தவம் புரிய, அவர்பால் இருந்த உயிர்க் கரு, யோக வலிமையால் மேல்நோக்கி எழுந்தது. அது கண்வழியே தோன்ற, அதனைப் பிரமதேவன் தொகுத்து, விமானத்தில் இட்டான். அது உயிர்பெற்று, ஸோமன் என்ற பெயருடன் விளங்கியது. தண்ணிய ஒளியும் துளியும் உடைய ஸோமனிடத்திலிருந்து சிந்திய அமுதத் துளியிலிருந்து பயிர்களும் பச்சிலைகளும் தோன்றின. ஸோமன், சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்து, ஒன்பது கோள்களில் ஒருவனானான். அந்தணருக்கும் பயிர், மூலிகைகள் ஆகியவற்றிற்கும் தலைவனானான். சிவபெருமான் திருவிழிகளில் ஒன்றாகவும், அப்பெருமான் திருமுடிக்கண்ணே அணியும் அணிகலனாகவும் விளங்கலானான். இது காசி காண்டத்தில் உள்ள கதை.

தட்சனுடைய பெண்களான அசுவதி முதலிய இருபத்தேழு பேர்களைச் சந்திரன் மணந்தான். தன் மனைவியர் எல்லோரிடமும் ஒத்த அன்பு வைக்காமல் கார்த்திகையினிடமும் ரோகிணியினிடமும் மிகுதியாகக் காதல்கொண்டு ஒழுகினான். அதனால் துன்புற்ற மற்ற நட்சத்திர மங்கையர், தம் தந்தையாரிடம் முறையிடவே, "உனக்கு க்ஷயரோகம் உண்டாகுக!" என்று தட்சன் சபித்தான். அதனால் நாளுக்கு ஒரு கலையாகத் தேயத் தொடங்கினான். பிறகு சிவபிரானுடைய அருளால் தேய்ந்த கலைகள் மறுபடியும் வளரப்பெற்றான். அதுமுதல் அவன் கலைகள் தேய்ந்தும் வளர்ந்தும் வருகின்றன.

தட்ச யாகத்தில் சிவபெருமானுடைய காலால் தேய்க்கப்பெற்றவன் சந்திரன். கந்த புராணம் முதலிய புராணங்களில் இந்த வரலாறுகளைக் காணலாம்.

ஒரு சமயம் நாரதர், சிவபெருமானிடம் ஒரு மாங்கனியைக் கொண்டு வந்து கொடுத்தார். அதைக் கணபதி, தமக்குத் தரவேண்டுமென்று கேட்டார். அப்போது சந்திரன், கணபதியைக் கண்டு நகைத்தான். விநாயகர் அவனுக்கு ஒளியிழக்கவும், மேனி நிலை மாறவும் சாபமிட்டார். சந்திரன், தன் பிழை பொறுக்க வேண்டுமென்று பணிந்து வேண்டவே, "ஒரு நாள் மாத்திரம் நீ சண்டாளத்துவம் அடைவாய்" என்று அருளினார். ஆவணி மாதம் வளர்பிறைச் சதுர்த்தியன்று அவனைப் பார்த்தால் தோஷம் உண்டாகும் என்று சொல்வார்கள். 'நாலாம் பிறைச் சந்திரனைக் கண்டவர்கள் நாய் பட்டபாடு படுவார்கள்' என்று இச் செய்தி பழமொழியிலும் ஏறிவிட்டது.

---

1. குருகுலச் சருக்கம், 1 - 6.

சந்திரன் ஓஷதிகளுக்குத் தலைவன். பல ராஜசூய யாகம் செய்த பயனாகப் பிருகஸ்பதியின் தேவியாகிய தாரையோடு கலந்து இன்புற்றான்.

அப்போது புதன் அவர்களுக்குச் சேயாய் உதித்தான். தன்னுடைய நீதியில்லாத செய்கையால் சந்திரன் சாபம் பெற்றான். தேவாசுர யுத்தம் உண்டாயிற்று. அதன்பின் தாரை மீண்டும் பிருகஸ்பதியினிடம் சென்றாள். இவனுடைய கலையை முதல் பதினைந்து நாள் தேவர்களும், பின் பதினைந்து நாள் தென்புலத்தாரும் அருந்துவர். சூரியனது சுழுமுனை என்னும் கதிரால் ஒளிபெறுகிறவன் சந்திரன்,

சந்திரனுக்குக் கலைஞான பாதன் என்ற குமாரன் ஒருவன் உண்டு. நற்குணமும் வெண்ணிறமும் தென்கிழக்கும் சந்திரனுக்கு உரியவை. இவனுடைய தேருக்கு மூன்று சக்கரங்கள் என்றும், அத் தேரில் பூட்டியவை குருந்த மலர் நிறமுடைய குதிரைகள் பத்தென்றும் கூறுவர்.[1]

## 4

திருக் கோயில்களில் நவக்கிரகங்களில் ஒன்றாக இருப்பதோடு, தனியே பரிவார தேவதைகளிலும் ஒருவனாகச் சந்திரனை வைத்து, வழி படுவது வழக்கம். அவனுடைய திருவுருவத்தை அமைப்பதற்குரிய இலக் கணங்களை ஆகமங்கள் சொல்கின்றன. சந்திரனைத் தியானிப்பதற்குரிய சுலோகங்கள் சில உண்டு. அவற்றிலும் தண்கதிரவனுடைய உருவ வருணனையைக் காணலாம். சந்திரமூர்த்தியை, வீற்றிருக்கும் திருக்கோலத் திலும் வழிபடலாம்; நின்ற கோலத்திலும் திருவுருவமைத்துப் பூசிக்கலாம். சந்திரன் சிங்காதனத்தில் எழுந்தருளியிருப்பான். அவனுடைய நிறம் தூய வெண்மை. அவன் தலையைச் சுற்றி ஒளிவட்ட மாகிய பிரபை திகழும். பல்வகை அணிகள் புனைந்தவன். பன்னிற மலர்மாலையை அணிந்தவன். வெள்ளை ஆடை உடுத்திருப்பான். குமுதத்தை ஏந்திய இரண்டு திருக்கரங்களை உடையவன். திருமார்பில் பொன்னூல் இழை திகழும். எழில் ஒழுகும் திருமுகமும் அமைதி தவழும் பார்வையும் உடையவன் தண்கதிரோன்.[2]

சிற்ப ரத்தினம் என்ற நூல், சந்திரனைத் தேரில் அமர்ந்த கோலத்தில் காட்டுகிறது. பத்துக் குதிரைகள் பூட்டிய தேர் அது. சந்திரமூர்த்தியின் வலத்தே காந்தியென்னும் தேவியும், இடப்புறத்தே சோபை என்னும் தேவியும் வீற்றிருப்பர். திருத்தேரின் மேலே இடப்பக்கத்தில் சிங்கக் கொடி அசையும்.

பூர்வகாரண ஆகமம், சந்திரனுக்கு அருகே ரோகிணி வீற்றிருப்பதாகச் சொல்கிறது.

நவக்கிரக ஆராதனம் என்னும் நூல், சந்திரனை வழிபடும் முறைகளை விரிவாகச் சொல்கிறது. அதில் உள்ள தியான சுலோகத்தினால் சந்திர னுடைய திருக்கோலம் புலனாகிறது. அக்கினி திக்கில் பத்துக் குதிரைகள்

---

1. அபிதான சிந்தாமணி.
2. Hindu Iconography by T. A. Gopinatha Rao.

பூட்டிய தேரில் சந்திரன் எழுந்தருளியிருப்பான். அத் தேருக்கு இரண்டு சக்கரங்கள். சதுரமான பீடத்தில் கதாயுதத்தை ஏந்தி, அவன் வீற்றிருப்பான். தண்மை அவன் இயல்பு. வெண்மை அவன் வண்ணம். அவன் ஆடையும் வெள்ளியது. திருமுடி தரித்திருப்பான். அமுதமயமாக விளங்குபவன். கர்க்கடக ராசிக்கு அதிபதி. சூரியனுக்கு அக்கினி திசையில் இருப்பவன்.

சந்திரனுக்கு அதிதேவதை நீர்; பிரத்யதிதேவதை கௌரி.

ஸ்ரீ முத்துஸ்வாமி தீட்சிதர் சந்திரமூர்த்தியைப்பற்றிப் பாடிய கீர்த்தனத்தில், 'அவன் லோகபாலர்களால் துதிக்கப் பெறுபவன்; தாரையின் நாயகன்; நான்கு புஜங்களை உடையவன்; மன்மதனுக்குக் குடையாக இருப்பவன்; விராட்புருஷனது மனத்தில் தோன்றியவன்; பிரம்மாவுக்கும் முருகனுக்கும் முகமாக இருப்பவன்' என்று சொல்கிறார்.

நவக்கிரக ஸ்தோத்திர சங்கிரகம் என்ற நூலில் சந்திரனுக்குரிய பெயர்கள் இருபத்தெட்டைப் பார்க்கலாம். அமுதத்தை உண்டாக்குவதால் அவனுக்குச் சுதாகரன் என்ற பெயர் உண்டாயிற்று. குமுதமலரை மலர்த்துவதால் குமுதப்பிரியன் என்ற நாமம் அமைந்தது. முயல் போன்ற கறையை உள்ளே உடைமையால் சசி, சசாங்கன், சசதரன் ஆகிய பெயர்கள் ஏற்பட்டன. அந்த முயலை, மானென்றும் சொல்வதுண்டு. ரோகிணியின் நாயகனாதலால் ரோகிணீபதி என்றும், பனியை உண்டாக்குதலால் ஹிமகரன் என்றும், அந்தணர்களுக்குத் தலைமை பூண்பதால் த்விஜ ராஜன் என்றும், இரவைச் செய்வதால் நிசாகரன் என்றும், அத்திரியினிடம் உதித்தமையால் ஆத்திரேயன் என்றும், மூலிகைகளுக்கு வளர்ச்சியைத் தருவதால் ஓஷதீசன் என்றும், கலைகளை உடைமையால் கலாநிதி என்றும், திருமகளோடு பாற்கடலில் உதித்தமையால் ரமாப்ராதா என்றும், நட்சத்திரங்களை மனைவியராகப் பெற்றமையால் நட்சத்திர நாயகன், உடுபதி என்றும் அவனுக்குப் பெயர்கள் வழங்குகின்றன.

சிவபெருமானுக்குரிய எட்டு மூர்த்தங்களில் சந்திரனும் ஒருவன்.

"அருநிலைய திங்களாய் ஞாயிருகி"

என்று அப்பர் சுவாமிகள் பாடுகிறார். இறைவனுடைய திருமுடியிலே பாலசந்திரன் திகழ்கிறான்.

"பிறைநுதல் வண்ணமாகின்று"

என்பது புறநானூறு. அவனுடைய இடக்கண்ணாக விளங்குகிறான். அம்பிகை சந்திரமண்டலத்தினிடையே அமுதமயமாய் விளங்குகிறாள். அதனால் அப் பிராட்டிக்குச் சந்திரமண்டல மத்யகா என்ற திருநாமம் வழங்குகிறது.

சந்திர வம்சத்தில் உதித்தவர்கள் பாண்டிய மன்னர்கள். சந்திர மூர்த்திக்கு விருப்பமான மொழி, தமிழ். அவனுக்குரிய உலோகம் ஈயம். அவனுடைய விருப்பத்துக்குரிய மணி முத்து. நெல் அவன் தானியம். வெள்ளை அல்லி அவன் மலர். அவன் விரும்பும் தின்பண்டம் முறுக்கு. இனிமையே உருவான அவனுக்கு உரிய சுவை இனிப்பு.



சந்திரன் - ஒரு பழைய ஓவியம்

யோகிகள், இடைகலையாகிய மூச்சைச் சந்திர கலை என்பர். யோகத்திலல் மூலாதாரத்து அக்கினியை எழுப்பி, ஆறு ஆதாரமும் கடந்து, சந்திர மண்டலத்திலே தாக்கச் செய்து, அப்போது வரும் அமுதத்தைப் பருகினால் ஆனந்தம் உண்டாகும் என்பர்.

## 5

தமிழ் நூல்களில் மேலே, சொன்ன செய்திகளில் சிலவற்றைக் காணலாம். சிலப்பதிகாரத்தை இளங்கோவடிகள் தொடங்கும்போதே,

"திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர் தார்ச்சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்கண் உலகளித்த லான்"

என்று திங்களைப் போற்றுகிறார். பூம்புகார் நகரில் சந்திரனுக்கென்று தனியே ஒரு கோயில் இருந்ததாம். அதை 'நிலாக்கோட்டம்' என்று ஆசிரியர் குறிக்கிறார். சந்திரனைத் தொழுது காண்பது தமிழர் வழக்கம். அதனால் அதைத் 'தொழுது காண்பிறை'[1] என்று ஒரு புலவர் பாடுகிறார்.

அகப்பொருள் துறைகளில் ஒன்று, 'பிறை தொழுகென்றல்' என்ற பெயரோடு உள்ளது. ஒரு மங்கைநல்லாள் பிறர் அறியாதபடி ஒரு காதலனோடு அளவளாவுகிறாள். அவளுடைய தோழி, அவளுடைய வேறு

1. குறுந்தொகை.

பாட்டைக் கண்டு ஐயுறுகிறாள். அந்த ஐயத்தைப் போக்கிக்கொள்ள வேண்டி அந்த மங்கையைப் பார்த்து, 'இதோ பிறை தோன்றியிருக்கிறது. இதைத் தொழுவது மகளிர் இயல்பு. இதை நீயும் தொழுவாயாக!' என்று சொல்வாள். அதுவே பிறை தொழுகென்றல் என்னும் துறையாகும். கன்னிமகளிர் எருவைக் கையில் வைத்துத் தூவிப் பிறையைத் தொழுவார்கள். சந்திரன் பயிர்களுக்குத் தலைவனாகையால் பயிரை வளர்க்கும் எருவைக் கொண்டு, அவனைக் கும்பிடும் வழக்கம் ஏற்பட்டது. தோழியின் கூற்றைக் கேட்ட காதலி, பிறையைத் தொழமாட்டாள். அவள் இப்போது ஒரு காதலனை அடைந்துவிட்டாள். ஆதலால் வேறு தெய்வத்தை வழிபடுவது முறையன்று. எனவே, தோழி, 'பிறையைத் தொழு' என்று சொன்னவுடன் அந்தப் பெண் நாணம் அடைந்து, தலை குனிந்து, தொழாமல் நிற்பாள். அந்தக் குறிப்பைக் கொண்டு தோழி, அவள் தனக்குரிய காதலனைப் பெற்றுவிட்டாள் என்று உணர்ந்துகொள்வாள். கோவை என்னும் பிரபந்தத்தில், 'பிறை தொழுகென்றல்' என்ற துறைக்குரிய பாடல்கள் இருக்கின்றன. சந்திரனுடைய பெருமையைத் தோழி எடுத்துச் சொல்வதை அங்கே காணலாம்.

"மைவார் கருங்கண்ணி செங்கரம் கூப்பு; மறந்தும்மற்றப்
பொய்வா னவரிற் புகாதுதன் பொற்கழற் கேஅடியேன்
உய்வான் புகஒளிர் தில்லைநின் றோன்சடை மேலதொத்துச்
செவ்வான் அடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே"[1]

என்பது திருக்கோவையாரில் வரும் பாடல்.

சிறு குழந்தைகளுக்கு நிலாவைக் கண்டால் அளவற்ற களிப்பு. 'அம்புலிமானே வா வா' என்று அழைப்பார்கள். 'நிலா நிலா வா வா, நில்லாமல் ஓடி வா, மலைமேலே ஏறி வா' என்று தம் சிறு கைகளை ஆட்டி, அழைப்பார்கள். இவ்வாறு அழைக்கும் பருவத்தை அம்புலிப் பருவம் என்று புலவர்கள் சொல்வார்கள். பெரியாழ்வார், கண்ணபிரானோடு அம்புலியை விளையாட அழைக்கும் பாசுரங்கள் பத்துப் பாடியிருக்கிறார்.

"தன்முகத்துச் சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்துபோய்
பொன்முகக் கிண்கிணி யார்ப்பப் புழுதி அளைகின்றான்
என்மகன் கோவிந்தன் கூத்தினை இளமாமதீ
நின்முகன் கண்ணுள வாகில் நீஇங்கே நோக்கிப்போ"

என்று அழைக்கிறார். பிள்ளைத் தமிழ் என்ற ஒருவகைப் பிரபந்தங்களில் அம்புலிப் பருவம் என்றே ஒரு பகுதி உண்டு. அதில் சந்திரனுடைய பெருமைகளும் வரலாறும் வரும்.

---

1. 'மறந்தும் பொய்யான தேவர்களிடம் புகாமல் தன் பொன்னடியிலேயே புகல் புகும்படியாக, விளங்குகின்ற தில்லையில் நின்ற சிவபெருமானுடைய சடையின்மேல் உள்ள பிறையை ஒத்து, செக்கர்வானை அடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கு, மைவார்ந்த கரிய கண்ணையுடையாய், உன் செங்கரங்களைக் கூப்புவாயாக' என்பது இதன் பொருள்.

தெய்வங்களைப் பாடும் இசைப் பாட்டுக்களுக்குத் தேவபாணி என்று பெயர். சந்திரனையும் தேவபாணியால் பாடுவார்கள்.

"நலம்பெறு கொள்கை,
வானூர் மதியமும் பாடி"

என்று சிலப்பதிகாரத்தில் இந்தப் பாட்டைப்பற்றிய செய்தி வருகிறது. அங்கே உரையாசிரியர் சந்திரனைப் பாடிய தேவபாணிக்கு ஓர் உதாரணம் காட்டுகிறார்.

"குரைகடல் மதிக்கும் மதலையைக் குறுமுயல் ஒளிக்கும் அரணினை
இரவிருள் அகற்றும் நிலவினை இறையவன் முடித்த அணியினை
கரியவன் மனத்தின் உதிதனை கயிரவம் மலர்த்தும் மகிணனை
பரவுநர் தமக்கு நினதிரு பதமலர் தபுக்க வினையையே."

'ஒலிக்கின்ற பாற்கடலைக் கடையும்போது தூணாக நின்றாய். குறிய முயல் ஒளிக்கின்ற பாதுகாப்பிடமாக இருக்கிறாய். இரவில் இருளை அகற்றும் நிலவை உடையாய். திருமாலின் மனத்தே உதித்தவன் நீ. குமுத மலரை மலர்த்தும் நாயகனாக உள்ளாய். நின் இரு பாத மலர்களையும் துதிப்பவர்களுக்கு அவை பாவங்களை நீக்குவன வாருக!' என்பது இதன் பொருள்.

காப்பியக் கவிஞர்கள் சந்திரனுடைய உதயத்தையும் மறைவையும் அழகாகப் பாடியிருக்கிறார்கள். சந்திரன் காதல் தெய்வம் என்று பாரதியார் சொல்கிறார். 'ஸோமதேவன் புகழ்' என்று ஒரு பாட்டை அவர் பாடியிருக்கிறார்.

"ஜய ஸோம ஜய ஸோம ஜய ஸோம தேவா!"

என்று தொடங்குவது அந்தப் பாடல். 'வியனுலகில் ஆனந்த விண்ணிலவு பெய்தாய்' என்றும், 'மயல் கொண்ட காதலரை மண்மிசைக் காப்பாய்' என்றும் பாடுகிறார். நிலாவைக் கண்டு, உலகமே இன்பக் கொந்தளிப்பை அடைகிறது. கவிஞர்கள்பால் கவிவெறி மூள்கிறது.

## ௬

ஓவியத்தில் சதுரமான பீடத்தின்மேல் அமைந்த ஆசனத்தில் சந்திரமூர்த்தி வீற்றிருக்கிறான். அந்தப் பீடம் உள்ள தேர், இரண்டு சக்கரங்களும் பத்துக் குதிரைகளும் உடையதாக இருக்கிறது. கையிலே வெள்ளை அல்லியை ஏந்தி, உடம்பெல்லாம் அணிகள் அணிந்து, பன்னிற மாலை வேய்ந்து, முடி புனைந்து விளங்குகிறான் மதிக்கடவுள். தண்மையும் மென்மையும் அமைதியும் உருவாக விளங்கும் அவனுடைய திருமுக மண்டலத்துக்குப் பின் ஒளி வட்டம் ஒளிர்கிறது. வெண்குடை, இடத்தே ஓங்கி நிற்க, அதன் மேல் சிங்கக் கொடி பறக்கிறது. கர்க்கடக ராசிக்கு உடையவன் இவன் என்பதை அருகில் உள்ள நண்டு குறிக்கிறது.

சந்திரனை அடுத்து ரோகிணி இருக்கிறாள். அவளருகே உள்ள நட்சத்திரம் அவள் நட்சத்திர மங்கை என்று காட்டுகிறது. சந்திரனின்

*அதிதேவதையாகிய நீர், இங்கே நீர்மகளாக நீர்ப்பரப்பின்மேல் தோற்று கிருள். அவனது இடப்புறத்தே பிரத்தியதி தேவதையாகிய கௌரி, குழற் கோலம் திகழ வீற்றிருக்கிருள். பின்னே மேருமலை, நிழல்போலத் தோன்றுகிறது. சந்திரன் நிசாகரன் ஆதலின் இரவின் கருமையையே நிலைக்களமாக வைத்து, ஓவியர் இதைத் தீட்டியிருக்கிருர். முகிற்கணம் சிதறிய வானத்தையும் அந்த நிலைக்களத்திலே காண்கிறோம்.*

*எல்லாம் எழில் உருவாக அமைய, இடையே அமுத எழில் பொங்க, அருளொழுகு கண்ணும் சாந்தம் மலரும் முகமும் உடைய வெண்மதித் தேவன் வீற்றிருப்பது இனிய காட்சி.*

தண்ணென் நிலவால் சராசரத்துக் கின்புதவிக்
கண்ணெகிழும் பூங்குவளை கட்டவிழ்த்து-விண்ணவர்கள்
ஆரமுதம் உண்ண அருளோ டொளிபரப்பிச்
சீருறுவான் திங்கட்புத் தேள்.

# அங்காரகன்

மங்களன், குஜன், செவ்வாய் முதலிய பெயர்களை உடைய அங்காரகன், நவக்கிரக மண்டலத்தில் மூன்றாவதாக வருகிறான். சூரியனுக்குத் தெற்கே இவனை ஆவாகனம் பண்ணிப் பூஜிப்பது மரபு. திருமேனியும் உடை, மாலை முதலியனவும் நல்ல சிவப்பாக இருத்தலின் செவ்வாய் என்ற பெயர் தமிழில் வழங்குகிறது; செம்மீன் என்றும் சொல்வதுண்டு.

"முந்நீர் நாப்பண் திமிற்சுடர் போலச்
செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்"

என்பது புறநானூறு.[1]

பூமிதேவியினால் வளர்க்கப் பெற்றவனாதலின் அங்காரகனை நிலமகளின் சேயாகக் கூறுவர். குஜன் என்ற பெயர் அதனால் அமைந்ததே. தரா சுதன், பௌமன் என்பனவும் அந்தக் காரணத்தால் ஏற்பட்ட பெயர்களே.

உமாதேவி, இறைவனை நீங்கியிருந்த காலத்தில் சிவபெருமான் யோகத்தில் இருந்தார். அப்போது அவருடைய நெற்றிக் கண்ணில் வேர்வை உண்டாகிப் பூமியில் விழுந்தது. அதிலிருந்து மங்களன் குழந்தை வடிவாகத் தோற்றினான். அக் குழந்தையை நிலமகள் வளர்த்தாள். அவன் தவம் செய்யலானான். அத்தவத்தின் மிகுதியினால் அவன் உடம்பில் யோகாக்கினி கொழுந்து விட்டு எரிந்தது. அத்தவத்தின் பயனாகக் கிரக பதவியை அடைந்தனன்.



அங்காரகன் - பழைய ஓவியம்

மற்றொரு வரலாறு வருமாறு: பாரத்துவாச முனிவர்பால் தோற்றிய கருவிலிருந்து மங்களன் குழந்தை உருவாகி வந்தான். அவனைப் பூமிதேவி வளர்த்து வந்தாள். உரிய பருவத்தில் பாரத்துவாச முனிவ

---

1. புறநா. 60: 1-2. 'கடலிடையே படகின் விளக்குத் தோன்றுவதுபோலச் செவ்வாய் ஒளிவிடும், வானத்தில்' என்பது இதன் பொருள்.



நெற்றிக்கண் வேர்வையிலிருந்து தோன்றி......

ரிடத்தில் அனுப்பிக் கலைகளைப் பயிலச் செய்தாள். அம் முனிவர் அங்காரகனிடத்தில் அன்பு பூண்டு, பல கலைகளையும் கற்பித்தார். கலை நிரம்பியபின் அவன், தவம் செய்யலானான். அந்தத் தவத்தின் பயனாக ஒன்பது கிரகங்களில் ஒன்றாகும் சிறப்பை அடைந்தான்.[1]

வீரபத்திரரே அழகுத் திருவுருவம் பூண்டு, மங்களனாக விளங்குகிறார் என்பது ஒரு வரலாறு. தக்கன் செய்த யாகத்தை வீரபத்திரப் பெருமான் சங்காரம் செய்து, அந்த வீறு குன்றாமல் மேலும் தம் பராக்கிரமத்தைக் காட்டலானார். அதனால் உலகங்களெல்லாம் நடுங்கின. அது கண்ட தேவர்கள் அஞ்சி, அப்பெருமானைப் பணிந்து வேண்டினர். அவர்கள்பால் இரங்கிய வீரபத்திரர், தம்முடைய பயங்கர உருவத்தை மாற்றிக்கொண்டு கவின் பெறும் திருவுருவத்தோடு அங்காரகனைத் தோற்றினார். இவ்வரலாறு மச்ச புராணத்தில் உள்ளது.

வீரபத்திரருடைய அம்சமாதலின் வீரபத்திரருக்குச் செவ்வாய்க் கிழமை விரதம் சிறந்ததாயிற்று. சித்திரை மாதம், முதற் செவ்வாயில் வீரபத்திர மூர்த்தியை வழிபட்டு, விரதம் இருப்பது மரபு.

'பரித்திடுசெவ் வாய்விரதம் திறல்வீர
பத்திரற்குப் பகுத்த நோன்பு
தெரித்தவரன் முறைநோற்றார் இருநிலத்துப்
பெருநிதியச் செல்வ ராகி

---

1. அபிதான சிந்தாமணி.

பரித்திடு - மேற்கொள்ளும்; பகுத்த - உரிமையாக்கிய; வரன்முறை - விதிப்படி;

விரித்தபெருங் கிளைகளொடும் மக்களொடும்
நலம்நுகர்ந்து மிகுநாள் வைகிப்
புரித்தபெருஞ் சடைப்பெருமான் திருக்கயிலை
புகுந்துகதி புகுது வாரால்"[1]

என்று செவ்வாய்க்கிழமை விரதத்தைப்பற்றி உபதேச காண்டம் சொல்கிறது.

## 2

அங்காரகனுடைய திருமேனி, ரத்தம்போலச் சிவந்தது. அவன் செவ்வாடையன். செம்மலர் மாலை புனைபவன். நான்கு திருக்கரங்களை உடையவன். வலத் திருக்கரங்களில் அபயமும் சக்தியாயுதமும் தரித்திருப்பான். இடத் திருக்கரங்களில் கதையும் சூலமும் திகழும்.

அங்காரகனுக்கு மேஷ வாகனம் என்று பல நூல்கள் சொல்கின்றன. சிங்காதனத்தில் வீற்றிருப்பதாகச் சொல்வதும் உண்டு. எட்டுக் குதிரைகள் பூட்டிய பொற்றேரில் எழுந்தருளும் திருக்கோலம் உடையான் என்றும் ஒரு நூலால் அறிகிறோம்.[2]

ஸ்ரீ முத்துசாமி தீக்ஷிதரவர்கள், 'அங்காரகம் ஆச்ரயாமி' என்று தொடங்கும் கீர்த்தனத்தைச் சுருட்டி ராகத்தில் பாடியிருக்கிறார். அது அங்காரகன் பெருமையைச் சொல்வது. 'அங்காரகன் தன்னை வணங்குபவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றுபவன். மங்கள வாரத்துக்கு அதிபதி. நிலமகளின் சேய். மேஷ ராசிக்கும் விருச்சிக ராசிக்கும் உரியவன். செவ்வண்ண மேனியன். செவ்வாடையும் செந்நிற மாலையும் புனைபவன். சக்தி, சூலம் என்னும் படைகளை ஏந்துபவன். மங்கலத் திருவுரு வுடையவன். சங்கனைய திருக்கழுத்தினன். நலத்தைச் செய்பவன். ஆட்டை ஊர்தியாக உடையவன். மகர ராசியில் உச்சத்தை அடைபவன். தேவரும் தானவரும் பணிகின்ற சிறப்புடையவன். புன்னகை பூத்த திருமுகத்தினன்.



பூமிதேவியிடம் வளர்ந்து......

1. உபதேச காண்டம், சிவவிரத மான்மியச் சருக்கம், 4.
கிளைகள் - சுற்றத்தார்; நுகர்ந்து - அநுபவித்து; வைகி - வாழ்ந்து; கதி - சிவகதி.
2. Hindu Iconography by T. A. Gopinatha Rao.


..பாரத்துவாச முனிவரிடம் கலைபயின்று..

வழிபடுவோருக்கு நிலம் அருள்பவன். சகோதர காரகன். செங்கண்ணை உடையவன். அநாதைகளைப் பாதுகாப்பவன். வைத்தீசுவரன் கோயில் என்னும் தலத்தைத் தனக்குரிய க்ஷேத்திரமாகப் பெற்றவன். முருகனுடைய கடைக்கண் பார்வைக்கு உரியவன். சூரியன், சந்திரன், குரு என்பவர்களுக்கு நண்பன். புகழ்பெற்ற மனைவாட்டியைப் பெற்றவன். முழங்காலில் கையை வைத்துக்கொண்டிருப்பவன். நான்கு கைகளை உடையவன்' என்ற செய்திகளை அக்கீர்த்தனத்திற் காணலாம்.

புள்ளிருக்கு வேளூரில் அங்காரகனுக்குத் தனிச் சந்நிதி இருக்கிறது. ஒவ்வொரு செவ்வாய்க் கிழமையிலும் பலர் அம்மூர்த்திக்கு அர்ச்சனை முதலியன செய்து, வழிபடுவர். அதனால்தான் முத்துசாமி தீட்சிதர், 'வைத்தீசுவரன் கோயில் என்னும் தலத்தைத் தனக்குரிய க்ஷேத்திரமாகப் பெற்றவன்' என்று பாடினர்.

அங்காரகனை வழிபடுவதனால் வெட்டுக்காயம், புண் முதலியவற்றால் உண்டாகும் துன்பம் தீருமென்றும் பூமி முதலிய செல்வம் பல்குமென்றும் கூறுவார்கள்.

## 3

நவக்கிரகங்களை வழி படும் முறைகளைச் சொல்லும் வடமொழி நூல் ஒன்றில்[1] மேலே காணும் செய்திகளோடு வேறு சில செய்திகளும் உள்ளன.

அங்காரகனுக்குச் சிவப்புக் குடை உண்டு. அவனுடைய கொடி மேஷக் கொடி. திருமுடி தரித்திருப்பான். தன் பத்தினியோடு எழுந்தருளியிருப்பான். முக்கோண மண்டலத்தில் வீற்றிருப்பான். அவனுடைய நாடு அவந்தி. பாரத்துவாசர் மரபைத் தன் கோத்திரமாக உடையவன்.

அங்காரகன் மேனியும் உடை முதலியனவும் செவ்வண்ணம் உடையவை. தெய்விக ரதத்தில் அமர்ந்து, மேருவை வலம் வருவான்.

அவனுக்குச் செஞ்சந்தனமும் செங்கொடியும் உரியவை.

---

1. நவக்கிரக ஆராதனம்.

அங்காரகனுக்கு அதிதேவதை பிருத்வி; பிரத்யதிதேவதை க்ஷேத்திர பாலகன். இவர்கள் முறையே அவனுக்கு வலத்தும் இடத்தும் இருப்பவர்கள்.

முத்துக்களில் செந்நீரோட்டம் உடைய வகை ஒன்று உண்டு. அதற்கு அங்காரகன் என்ற பெயர் வழங்கும்.

'சந்திர குருவே அங்கா ரகன்என
வந்த நீர்மைய வட்டத் தொகுதியும்'[1]

என்று சிலப்பதிகாரத்தில் இந்த முத்தைப்பற்றிய செய்தி வருகிறது. அங்கே அங்காரகன் என்பதற்கு, 'செந்நீர்முத்து' என்று அடியார்க்கு நல்லார் உரை எழுதுகிறார்.

செவ்வாயை ஆண் கிரகமென்றும் க்ஷத்திரிய குலமென்றும் சொல்வது ஒரு மரபு. செம்பாகிய உலோகமும் பவளமாகிய ரத்தின மும் துவரையாகிய தானியமும் அங்காரகனுக்கு விருப்பமானவை. செண்பக மலரும் கருங்காலியும் துவர்ப்புச் சுவையும் அவனுக்கு உரியவை. அவனுக்கு அன்ன வாகனமும் உண்டு.

செவ்வாய்க் கிரகப் பிரீதி செய்கிறவர்கள் த்ரிஷ்டுப் சந்தஸில் அமைந்த அவனுடைய மந்திரத்தை ஜபிப்பார்கள். துவரையையும் பவளத்தையும் செப்புப் பாத்திரத்தையும் தானம் செய்வார்கள்.

சிவபெருமானுடைய நுதற்கண் வேர்வையிலே தோற்றின வரலாற்றை எண்ணி, அங்காரகனிடம் முருகனுடைய அம்சம் இருப்பதாகக் கொண்டு, செவ்வாயன்று முருகனை வழிபடுவதும் சிலருடைய வழக்கம். முருகனுக்கும் அங்காரகனுக்கும் சில வகை ஒப்புமை இருப்பதும் இந்தக் கொள்கையுடையவர்களுக்கு ஆதாரமாக அமைகிறது. சிவந்த மேனி, சிவந்த ஆடை, சிவபெருமான் நுதற் கண்ணில் உதித்தல், ஆட்டை வாகனமாகக்



....தவம் செய்யலானான், அங்காரகன்.

1. சிலப்பதிகாரம்: 14: 194 - 6.

கொள்ளுதல், சக்தியை ஆயுதமாக ஏற்றல் முதலியவை முருகனுக்கும் அங்காரகனுக்கும் உள்ள ஒற்றுமைகள்.

அங்காரகனுக்குரிய திருநாமங்கள் பல. அவன் செவ்வண்ண மேனியை நினைப்பூட்டுபவை லோகிதாங்கன், ரக்தாயதேக்ஷணன், ரக்தவர்ணன் என்னும் பெயர்கள். அவன் வேலேந்துவதனால் சக்திதரன் என்ற பெயர் அமைந்தது. அழகுத் திருவுருவ முடைமையால் குமாரன் என்றும், பெரிய திருமேனி படைத்தமையால் மகாகாயன் என்றும், மங்கல உருவனாதலின் மங்கலனென்றும், செல்வத்தைத் தருதலின் தனப்ரதன் என்றும், பொற் குண்டலம் அணிந்தமையால் ஹேமகுண்டலி என்றும் பெயர் பெற்றான். குண ஹர்த்தா, ரோகக்ருத், ரோகநாசனன், வித்யுத்ப்ரபன், வ்ரண கரன், காமதன், தன ஹ்ருத், ஸாமகான ப்ரியன், ரக்த வஸ்த்ரன், க்ரக நாயகன், ஸர்வ கர்மாவ போதகன், ரக்தமால்யதரன் ஆகிய நாமங்களும்[1] அங்காரகனுடைய பலவகை இயல்புகளைக் குறித்து நிற்கின்றன.

பழங்காலத்தில் ரோமர்கள் செவ்வாயைப் போர்க் கடவுளாகக் கொண்டாடினர்; தங்களுடைய குல முதல்வன் என்று பாராட்டினர், அவனுக்கு அங்கங்கே கோயில்கள் இருந்தன. மார்ஸ் என்ற பெயர் ரோமில் செவ்வாய்க்கு வழங்கியது.

## 4

செம்மேனிப் பெருமானாகிய அங்காரகன் மேஷ வாகனத்தின் மேல் முக்கோணப் பீடத்தில் எழுந்தருளியிருக்கும் கோலத்தில் ஓவியம் அமைந்திருக்கிறது. மூன்று திருக்கரங்களிலும் சக்தி, சூலம், கதை என்னும் ஆயுதங்களைத் தாங்கி, ஒரு கரத்தால் அபயந் தருகிறான் அங்காரகன். அவனுக்குரிய ராசிகளை ஓர் ஓரத்தில் உள்ள ஆடும் தேளும் காட்டுகின்றன. பின்னால் மேருமலை இருக்கிறது. செவ்வாய், அம்மலையை வலம் வரும் செய்தியை இது நினைப்பூட்டுகிறது. முழங்காலின்மேல் ஒரு கையை வைத்திருக்கும் குஜனுடைய கண்கள் சிவப்பாக இருக்கின்றன. திருமுடியில் செம்மணிகள் மின்னே தோன்று கின்றன. அவன் திருச்செவியில் இடப்பக்கத்தே அதிதேவதையாகிய நிலமகள் இருக்கிறாள். பிருத்வீ என்பதையே இத் திருவுருவம் காட்டு கிறது. க்ஷேத்ரபாலன் செவ்வாய்க் கிரகத்தின் பிரத்தியதி தேவதை. வலப் பக்கத்தில் உலகையாளும் மன்னனைப்போல அத் தேவதையைக் காணலாம். அவன், பயிரையும் பசுவையும் பாதுகாக்கிறவன் என்பதை அத் திருவுருவத்திலிருந்தே தெரிந்துகொள்ளலாம்.

செங்கண்ணன் செம்மேனிச் செல்வன்செம் மாலையினன்
அங்கையில்வேல் சூலம் அடற்கதைகொள் - மங்கலத்தான்
மோதுந் தகரேறும் மூர்த்தி நிலமகட்குக்
காதற்சேய் அங்காரகன்.

---

1. நவக்கிரக ஸ்தோத்திர சங்கிரகம், நாராயண ராம ஆசார்யர் வெளியீடு.

# புதன்

அறிவிற் சிறந்தவர்களைப் புதனுக்கு ஒப்பிடுவது வழக்கம். புதனைப் பூசித்தால் வித்தைகள் எளிதில் வரும் என்று சொல்வார்கள்.

இந்தப் புதன், சந்திரனுக்கும் தாரைக்கும் மகவாய் உதித்தவன். குருவின் மனைவியாகிய தாரை, சில காலம் சந்திரனுடன் இருந்து கருவுற்றுள் பின் குருவின்பால் சென்றபோது புதன் உதித்தான். அவன் யாருடைய குழந்தை என்பதுபற்றி ஐயம் நேரவே, தாரை, 'சந்திரனுடைய குழந்தை' என்று சொல்லித் தெளிவுறுத்தினுள். புதன் அறிவிற் சிறந்தவனுக விளங்கினுன்.

இளன் என்னும் அரசன் சுகுமார வனம் என்னும் இடத்துக்கு வேட்டையாடச் சென்றுன். அம்பிகையின் சாபத்தால் அந்த வனத்துக்குள் செல்லும் மக்களும் விலங்குகளும் பெண்ணுருவை அடைவர். இளன் என்னும் அரசனும் அவனுடன் வந்தோரும் மகளிராயினர். இளன் இளை ஆனுன்.

அங்கே வந்த புதன், 'இந்த அழகி யார்?' என்று கவனித்தான்.

'கம்பெ னுங்கிரீ வக்குயில் அழகினைக் காணு
அம்ப ரத்தினிற் சசிசுதன் அனங்கசா யகத்தால்
வெம்பு நெஞ்சன்இம் மின்னிடை எவள்என உள்கி
நம்ப னுல்இறை நாரிஆ யினசெயல் அறிந்தான்.'[1]

அதன்பின் இளையுடன் இருந்த அரிவையரைப் பார்த்து, 'நீங்கள் கிம்புருடர்களைக் கணவராகப் பெற்று இன்புறுக' என்று கூறி, அவர்களை அனுப்பிவிட்டு, இளையுடன் இன்புறலானுன்.


புதன்

இளை, அம்பிகையின் வரத்தால் ஒரு மாதம் ஆணுகவும் ஒரு மாதம் பெண்ணுகவும் மாறி மாறி வாழ்ந்தாள். பெண்ணுக இருக்கும்போது புதனேடு இணைந்து வாழ்ந்தாள். அதனுல் கருவுற்றுப் புரூரவா என்ற மகனைப் பெற்றுள்.[2]

இளன் ஆணுகவும் பெண்ணுகவும் மாறி மாறி வாழ்வதை மாற்ற

---

1. ஐயங்கார் பாகவதம், குருகுல மரபுப்படலம், 21.
கம்பெனும் கிரீவக்குயில் - சங்கைப் போன்ற கழுத்தையுடைய குயிலைப் போன்ற பெண்; அம்பரம் - வானம்; சசிசுதன் - புதன்; அனங்க சாயகம் - காமனது அம்பு; மின்னிடை - மின்னலைப்போன்ற இடையை உடைய பெண்; உள்கி - எண்ணி; நம்பனுல் - கடவுளால்; இறை - அரசன்; நாரி - பெண்.
2. ''பெருந்திறற் புதனெனும் பெயரினுன்முனம், திருந்திழை இளையெனச் செப்பு மங்கையாம், மருந்துறழ் சாயலை மணந்து பெற்றனன், பெருந் தவர் வணங்குவேற் புரூர வாவையே.'' (பாகவத புராணம், 9. 12: 13.)





புதன் - பழைய படம்

எண்ணிய புதன், முனிவர்களை அழைத்து, அவர்களுடைய துணையால் அசுவமேத யாகத்தைச் செய்வித்தான். அப்போது சிவபெருமான் தோன்றி, இளனை, "இனி எப்போதுமே ஆடவனாக இருப்பாயாக!" என்று அருள் செய்தான்.

இளன் தன் நாட்டுக்குச் சென்ற பிறகு தனக்கும் இளைக்கும் பிறந்த மகனாகிய புரூரவாவைப் புதன் வளர்த்து வந்தான். பின்பு அவனைப் பிரதிஷ்டானபுரி என்ற இடத்துக்கு மன்னனாக்கி மகிழ்ந்தான். இவ்வாறு சந்திரனுடைய குலம் மேன்மேலும் வளர்வதாயிற்று.

புதனுடைய வரலாற்றைப் பாரதமும் பாகவதமும் கூறுகின்றன. சந்திர குலத்திற் பிறந்தவர்கள் பாண்டவர்கள். ஆதலின் அந்தக் குல வரலாற்றைச் சொல்லும்போது சந்திரனுடைய மகனாகிய புதனைப்பற்றிய செய்திகளும் வருகின்றன.

தாரைக்கும் சந்திரனுக்கும் உதித்தவன் புதன் என்பதை யாவரும் அறியப் பிரமதேவன் அறிவித்து, அவனைச் சூரியனுக்கு அருகில் உறையும்படி பணித்தான். புதன் அவ்வாறே இருந்து, சூரியனைப்போலவே மேருவை வலம்வந்தான்.

"தாரா தேவி சந்திரற்குப் பயந்தேன் என்ற தனயனைத்தான்
ஏரார் பிரமன் இரவியுடன் ஒருவாது அமர்வாய் என்றகலச்
சீரார் குணமிக்(கு) எழுந்தபுதன் சிறந்தே வயங்கும் கோள்களுக்கு
நேராய் உயர்ந்த வடவரையை நித்தம் வலமாய் வரும்நாளில்"[1]

என்பது ஐயங்கார் பாகவதம்.

புதன், சிவபிரானை நோக்கித் தவம் செய்து, ஒன்பது கிரகங்களில் ஒன்றாக விளங்கும் பேறு பெற்றனன். அவன் பிரதிஷ்டை செய்த லிங்கம் ஒன்று காசியில் இருக்கிறது.[2]

தான் செய்த தவத்தால் ரிக்வேதத்தின் ஐந்தாவது காண்டத்தின் அதிகாரியானான் புதன் என்று கூறுவர்.[3]

---

1. ஐயங்கார் பாகவதம், குருகுல மரபுப் படலம், 13.
பயந்தேன் - பெற்றேன்; ஏர் - அழகு; இரவி - சூரியன்; ஒருவாது - நீங்காமல்; கோள்களுக்கு கிரகங்களுக்கு; வடவரையை மேரு மலையை.
2. காசி காண்டம், 15: 33, 34.
3. அபிதான சிந்தாமணி.

## 2

**பு**தனுக்குக் கிரகபதி என்றும் ஒரு பெயர் உண்டு. அவன் சிங்க வாகனம் உடையவன். மஞ்சள் நிற மலர் மாலை வேய்ந்தவன். பொன்னணி பல பூண்டவன். பொன்னிற மேனிப் பொலிவினன். கோங்கு மலரைப்போன்ற நிறம் உடையவன். மஞ்சள் நிற ஆடை புனைந்தவன்.

அவனுக்குக் கரங்கள் நான்கு. வலக்கரம் ஒன்றில் வரதமும் மற்றக் கரங்களில் வாளும் கேடகமும் கதையும் ஏந்துபவன். விஷ்ணு தர்மோத்தரம், புதன் விஷ்ணுவைப்போலத் தோற்றுவான் என்றும் கூறுகிறது.[1]

ஸ்ரீமுத்துசாமி தீட்சிதர், தாம் இயற்றிய கீர்த்தனையில் புலப்படுத்தும் புத பகவான், தேவர்களால் துதிக்கப் பெறுபவன்; சந்திரனுக்கும் தாரைக்கும் திருமகன்; புலவர் தெரிந்து போற்றும் பிரான்; அந்தணரால் உவகை பெறுபவன்; சீரும் செல்வமும் வழங்குவோன்; குஜனுக்குப் பகைவன்; மணிபதித்த திருமுடியினன்; மணிமாலை, மணிவலயம், மணிக்காப்பு இவற்றை அணிந்தவன்; மிதுன ராசிக்கும் கன்னியா ராசிக்கும் தலைவன்; புத்தகத்தைக் கையில் கொண்டவன்; ஆணும் பெண்ணும் அல்லாத உருவினன்; அடியவர் போற்றும் புகழினன்; சிவனடியார் நலங்களை விரும்புபவன்; எப்போதும் ஆனந்தத்துடன் இருப்பவன்.



இளையும் அவள் தோழியரும்

1. Hindu Iconography by T. A. Gopinatha Rao.



தேர்மிகள் கிம்புருடர்களுடன்......

அவனைப்பக்தியுடன் பாடினுலும் அவன் மந்திரத்தை ஜபித்தாலும் மிக இனிய கவிதை பாடும் வன்மை உண்டாகும் என்பார்கள்.

புதனுடைய மந்திரம், திருஷ்டுப் சந்தத்தை உடையது; அதன் ரிஷி நாராயண ரிஷி. அவன் மேற்கு முகமாக வீற்றிருப்பவன். அவனுடைய கையில் வாளும் பரிசையும் கதையும் வரதமும் நிலவும். அவன் வீற்றிருக்கும் மண்டலம் அம்பு வடிவானது.[1]

அவனுக்கு மஞ்சள் சந்தனம் உரியது. மஞ்சள் நிறக் குடையும் கொடியும் அவனுடைய அங்கங்கள். அக் கொடியில் சிங்க உருவம் இருக்கும். சிங்க வாகனம் உடையவனுயினும் தேரிலும் எழுந்தருள்வான்.

நவக்கிரக மண்டலத்தில் சூரியனுக்கு வடகிழக்கே அமர்பவன் புதன். அவனுக்கு வலப்பக்கத்தில் அவனுடைய அதிதேவதையாகிய விஷ்ணு, தன் பரிவாரங்களுடனும் மனைவி மக்களுடனும் எழுந்தருளியிருப்பான். புதனுடைய பிரத்தியதிதேவதை நாராயணன். இவன் இரண்டு திருக்கரங்களுடன் திகழ்வான். பிருகு முனிவர் நாராயணனுடைய சாந்த இயல்பைச் சோதிக்கும் பொருட்டு அவனைத் தம் வலக் காலால் உதைத்தார். அதனுற் சிறிதும் சினம் கொள்ளாமல் அப் பெருமான், 'தேவரீர் திருவடி நோகுமே!' என்று வருடினனும். பிருகு முனிவருடைய வலத் திருவடியின் சுவடு, நாராயணனுடைய இடத்தோள் அருகில் இருக்கும்.

புதனுடைய திருநாமங்களிலிருந்து அவனுடைய இயல்புகள் பலவற்றை உணரலாம். அறிவிற் சிறந்தவனுதலால் புத்திமதாம் சிரேஷ்டன், புதன், ஞானி, ஞானி நாயகன் முதலிய பெயர்களைப் பெற்றுன். அறிவை வழங்குவதனுல் புத்திதாதா என்ற நாமமும் அறிவை வளர்ப்பதனுல் புத்தி விவர்த்தனன் என்ற பெயரும் அவனுக்கு அமைந்தன. பொருள் முதலியவற்றை வழங்குவதனுல் தனப்ரதன், தயாகரன், தார புத்ர தான்ய பசுப்ரதன் என்ற பெயர்களுக்கு உரியவனுனன். அழகுடையவன் என்பதைக் கஞ்ச

1. நவக்கிரக ஆராதனம் (வடமொழி நூல்.)

நேத்ரன், மனோகரன், ஸௌம்ய மூர்த்தி ஆகிய பெயர்கள் புலப்படுத்தும். விஷ்ணுவைப் போன்ற திருவுருவம் உடையனாதலால் விஷ்ணு ரூபி என்ற பெயரும் உண்டு. அவனுக்கு நட்சத்திரேசன் என்ற பெயரும் லோகப்ரியன் என்ற பெயரும் இருத்தலால் அவனுடைய பெருமை விளங்கும். மற்றக் கிரகங்களால் வரும் பீடையை நீக்கும் திறமை அவனுக்கு இருக்கிறது. அதனால்[1] க்ரகபீடாஹரன் என்று பெயர்.



புதனும் இளையும்

புதனுக்குப் பச்சை நிறமும் சொல்வர். அவன் நெடியவன். உவப்பான உலோகம் பித்தளை; தானியம் பச்சைப்பயறு; மலர் வெண்காந்தள்; சமித்து நாயுருவி; சுவை உவர்ப்பு; குதிரை வாகனமும் உண்டு.[2]

3

**வ**ண்ண ஓவியத்தில் விளங்கும் புதன் பொன்னிறமேனியோடு மஞ்சளாடை புனைந்து, சிங்க வாகனம் ஏறி, வாளும் பரிசையும் கதையும் வரதமும் திருக்கரங்களில் ஏந்தி, அழகு பொலிய வீற்றிருக்கிறான். அவனுடைய கொடியில் சிங்கம் இருக்கிறது. மேருவை வலஞ் செய்யும் குறிப்பைப் பின்னே தோன்றும் அதன் உருவம் தெரிவிக்கிறது.

வலப்புறத்தில் மேலே அதிதேவதையாகிய விஷ்ணு, சங்க சக்ர கதா தாரியாகத் திருமகளுடன் நிற்கிறார். இடப் பக்கத்தில் பிருகு முனிவருடைய அடிச்சுவடு மார்பில் தோன்ற இரண்டு திருக்கரங்களுடன் நாராயணனாகிய பிரத்தியதிதேவதை வீற்றிருக்கிறார்.

கீழே கன்னி யொருத்தியின் உருவமும் ஆணும் பெண்ணுமாகிய இரட்டையுருவமும் கன்னியா ராசிக்கும் மிதுன ராசிக்கும் தலைவன் புதன் என்பதை நினைப்பூட்டுகின்றன. பச்சைப் பசேலென்ற நிலைக்களத்தில் புதன், அறிவின் உருவாகவும் அழகின் உருவாகவும் திகழ்கிறான். சந்திரன் உள்ளங்கவர் அழகனாக இருப்பதுபோலவே இவனும் அழகனாகக் காட்சி தருகிறான். சந்திரனுடைய மகன் தானே இவன்?

புந்திவலி சேரப் புரிவான்பொன் மேனியினன்
சந்திரன்சேய் வாள்பரிசை தாங்குகதை - உந்துகையான்
வெம்புசிங்க ஊர்தியான் மேனுள் இளைதழுவும்
அம்புதன்என் றோதும் அவன்.

---

1. நவக்ரக ஸ்தோத்திர ஸங்க்ரஹம் *(வடமொழி.)*
2. அபிதான சிந்தாமணி.

# பிருகஸ்பதி

பிருகஸ்பதி என்ற திருநாமத்தைச் சொன்னாலே அறிவிலே சிறந்தவன் என்ற எண்ணந்தான் யாவருக்கும் உண்டாகும். நவக்கிரகங்களில் ஒன்றான குருவை வியாழனென்றும் பிருகஸ்பதியென்றும் கூறுவார்கள். தேவர்களுக்கெல்லாம் குருவாக விளங்குகிறவர் அவர். பிரமதேவனுடைய மானச புத்திரர்களில் ஒருவராகிய ஆங்கீரச முனிவருக்கும் சிரத்தா தேவிக்கும் புதல்வராக உதித்தவர் வியாழபகவான். அவருடைய மனைவி தாரை. சகோதரன் உதத்தியன்; சகோதரி யோகசித்தி அவருக்கு மமதை என்பவளிடம் தோன்றியவர் பாரத்துவாசர். பரீட்சித்தின் குமாரனாகிய ஜனமேஜயன் பாம்புகளையெல்லாம் அழிக்கும் பொருட்டு ஒரு சர்ப்பயாகம் செய்தான். அதை நிறுத்தும்படி செய்தவர் குரு.

ஒரு சமயம் இந்திரன் தெய்வத்தின் திருவருளை நினைந்து, பக்தியில் ஆழ்ந்து, தான் செய்ய வேண்டியவற்றைச் செய்யாதிருந்தான். தேவர்களுக்கு அரசனாகிய அவன் வாளா இருந்தமையால் தேவர்களின் வாழ்க்கையில் இடர்ப்பாடு மல்கியது. அவர்கள் தங்களுடைய குருவாகிய பிருகஸ்பதியிடம் முறையிட்டுக்கொண்டனர். அப்போது இந்திரனுடைய மனத்தை மாற்ற வேறு வழி ஒன்றும் இன்றி உலகாயத மதத்தை அவனுக்கு உபதேசித்தனர். உண்டு, உடுத்து, மகளிருடன் இன்புற்று வாழ்வதே முடிந்த முடிபு என்று சான்று காட்டி வற்புறுத்தினர். அதனைக் கேட்ட இந்திரன் மனம் மாறி, தெய்வ சிந்தனை நீங்கினன். அப்படியே விட்டு விட்டால் இழுக்கு நேரும் என்று கண்ட தேவகுரு அவனுக்கு மெல்ல மெல்லக் கடவுளுணர்வை ஏற்றினர்.



பிருகஸ்பதி - பழைய படம்

ஒரு முறை அவர் நீராடச் சென்றிருந்தார். நீர் தெளிவின்றி இருந்தது. ஆதலின் அதில் ஆட மனம் இல்லாதவராக அந்த நீரைச் சபிக்கத் தொடங்கினர்; 'இனி, தவளை மீன் முதலியவற்றால் நீர் கலக்கம் அடைக' என்று சாபம் கொடுத்தார்.[1]

---

1. அபிதான சிந்தாமணி.

குருவினுடைய குமாரனாகிய கசன் சுக்கிரனிடம் மாணவனாகப் புகுந்து, சஞ்சீவினி என்னும் வித்தையைத் தெரிந்து கொண்டான்.[1]

அங்கிராவின் புத்திரராகையால் ஆங்கீரஸர் என்ற பெயரும் குருவுக்கு வழங்கும். அவர் காசிக்குச் சென்று அங்கே ஒரு லிங்கத்தை நிறுவிப் பதினாயிரம் தேவ ஆண்டுகள் பூசித்துத் தவம் செய்தார். சிவபெருமான் அவர் தவத்துக்கு உவந்து, அவர் முன்னே எழுந்தருளி, "அரிய தவத்தைச் செய்து உன் மனத்தை இந்த லிங்கத் தியானத்திலே நிறுத்தியமையால் உன்னை ஜீவன் என்று உலகத்தார் வழங்குவர். உன்னுடைய குணங்களாலும் நம்முடைய திருவருளாலும் நீ இந்திரனுக்குக் குருவாக விளங்குவாயாக!' என்று வரம் கொடுத்தார்.[2]





உலகாயத மதத்தை உபதேசித்தார்.

"மன்பெருங் குணங்களை உடைய ஆற்றினும்
என்பெருங் கருணைஇன்(று) இயைந்த தானும்நீ
பொன்பயில் இருவிசும்(பு) அளிக்கும் புங்கவற்(கு)
அன்புடைக் குரவனே ஆதி ஈண்டெனு"

இறைவன் அருளியதாகக் காசிகாண்டம் என்ற நூல் கூறுகிறது.

## 2

பிருகஸ்பதி பொன் வண்ண மேனியினர். நான்கு திருக்கரங்களை உடையவர். கமண்டலம், அட்சமாலை, யோகதண்டம், அபயம் என்பவற்றை அந்தக் கரங்களிலே காணலாம்.[3]

---

1. மகாபாரதம், ஆதிபர்வம், 70-ஆம் அத்தியாயம்.
2. காசிகாண்டம், செவ்வாய் வியாழம் சனியுலகம் கண்ட அத்தியாயம்.
3. *Hindu Iconography*: T. A. Gopinatha Rao.

விஷ்ணு தர்மோத்தரம் என்னும் நூலில் பிருகஸ்பதி இரண்டு கரமுடையார் என்ற செய்தி உள்ளது. அவற்றில் புத்தகமும் அட்ச மாலையும் ஏந்திக்கொண் டிருப்பார் என்று அந்த நூல் கூறும். பல வகை அணிகளையும் பொன்னிற ஆடைகளையும் புனைந்தவர்.

அவர் சாந்த மூர்த்தி; சதுரமான பீடத்தில் இருப்பவர்; கிழக்கு நோக்கி இருப்பவர்; முடியுடையவர்; பொன்னிறத்தினர்; பொன்னிறச் சந்தனம் பூசுபவர்; பொன்னிற மலர், பொன்மாலை, பொன்னுடை, பொற் குடை, பொன்னிறத்துவசம், பொற்றேர் உடையவர். மேருவை வலம் செய்பவர்.

தநுர் ராசிக்கும் மீன ராசிக்கும் தலைவர். தம்முடைய பத்தினி யோடும் புத்திரர்களோடும் எழுந்தருளியிருப்பவர்.[1] இவருக்கு அன்ன வாகனமென்று ஒரு நூலும், யானை வாகனமென்று ஒரு நூலும் சொல் கின்றன.

இவருடைய வழிபாட்டுக்கு உகந்த தானியம் கடலை; மணி புஷ்பராகம்; மலர் முல்லை; சமித்து அரசு; சுவை இனிப்பு. இவர் தம்மை வழிபடுகிறவர்களுக்கு வாக்கை அருள்பவர்; மகப் பேற்றை வழங்கு பவர். ஈசான்ய திசை இவருக்கு உரியது.


.... நீரைச் சபிக்கத் தொடங்கினர்.

குருவின் அதி தேவதை பிரமன். பிரத்யதி தேவதை இந்திரன்.

தேவ குரு, ஸுராசாரியர், குரு என்ற திரு நாமங்கள், இவருடைய உபதேசத்தால் இந்திரனும் தேவர்களும் நன்மை பெறுவதைக் குறிப்பிக் கின்றன. வாகீசர் என்பது ஒரு திரு

1. நவக்கிரக ஆராதனம்.

நாமம். பீதாம்பரர், யுவர் என்பவை இவருடைய பொன்னுடையினாலும் இளமைத் தோற்றத்தாலும் வந்த பெயர்கள். த்ரிலோகேசர், லோக பூஜ்யர், கிரகாதீசர் என்பவை இவருடைய தலைமையை வெளிப்படுத்தும். கருணை நிரம்பியவராதலின் தயாகரர் என்ற பெயர் வந்தது. இன்னும் நீதிஜ்ஞர், நீதிகாரகர், தாராபதி, கிரகபீடாபஹாரகர், ஸௌம்யமூர்த்தி முதலிய பெயர்களும் உண்டு.

முத்துசாமி தீட்சிதரவர்கள் தம் கீர்த்தனையில் குருவைப் பிராம்மண குலத்தில் உதித்தவர் என்று பாராட்டுகிறார். மிக்க வலிமை உள்ளவர், ஸர்வ வியாபகர், வாக்குக்கு அதிபதி, இந்திரன் முதலியவர்களுடைய வழி பாட்டுக்கு உரியவர், திருமால் முதலியவர்களால் புகழ் பெறுபவர் என்று போற்றுகிறார். இவர் திருக்கரத்தில் வச்சிராயுதம் இருப்பதாகச் சொல்கிறார். தம்பால் வந்து பணிந்தவருக்குக் கற்பகம்போல் வேண்டியவற்றை அருளுகிறவர் பிருகஸ்பதி. ஏழைக்கு இரங்குபவர்; பரை, பைசந்தி, மத்திமை, வைகரி என்ற நால்வகை வாக்குக்களின் உருவை விளக்குகிறவர்; கருணைக் கடல்; தூயவர்; நீதி சாஸ்திர ஆசிரியர்; களங்க மற்றவர்.

பிருகஸ்பதி இயற்றிய நீதி நூல் ஒன்று உண்டென்று கூறுவர். திருக்குறளுக்கு உரை வகுத்த பரிமேலழகர் ஓரிடத்தில், 'தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதி நூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின்'[1] என்று எழுதுகிறார். அதிலிருந்து சுக்கிரநீதி என்ற நூல் இருப்பதுபோல, பிருகஸ்பதியின் பெயராலும் ஒரு நீதி நூல் வழங்கி யிருக்கலாமென்று தெரிகிறது.

## 3

இந்தப் புத்தகத்தில் காட்சி அளிக்கும் பிருகஸ்பதி தூய்மைக்கும் அறிவுக்கும் உறைவிடமாக விளங்குகிறார். குடை, முடி, சதுரமான பீடமுள்ள தேர், அதில் இரண்டு குதிரைகள் ஆகியவை அவருடைய தலைமைக்கு அடையாளங்கள். சாந்தமான பார்வை, உடம்பில் அணிந்த ருத்திராட்ச மாலைகள், கையிற் பிடித்த ஜபமாலை, ஞான முத்திரை காட்டும் கரம், ஒரு கையில் உள்ள யோக தண்டம், மற்றொன்றில் உள்ள கமண்டலம் ஆகியவை அவருடைய ஞானச் சிறப்பைக் காட்டுகின்றன. அவருக்கு அருகில் தாரை வீற்றிருக்கிறாள். அவளுடைய உருவம் சிறியதாக இருப்பது பிருகஸ்பதிக்குமுன் காமம் சிறுமையடைவதைக் காட்டுகிறது. பின்னே மேருமலையின் தோற்றத்தைக் காணலாம்.

வலப்பக்கத்தில் அதிதேவதையாகிய பிரமதேவன் அமர்ந்திருக்கிறான். மூன்று முகங்கள் முன் தோன்ற மற்றொன்று பின்னே மறைந்திருக்க அவன் காட்சி அளிக்கிறான். இடப்புறத்தில் பிரத்யதிதேவதையாகிய

1. திருக்குறள், 662, உரை.

*இந்திரன் தன் அரச நிலைக்கு ஏற்ற வகையில் யானையுடனும் ஆசனத்துடனும் விளங்குகிறான்.*

*நான்கு சக்கரங்கள் கொண்ட ரதத்தில் நாற்கோண பீடத்தில் எழுந்தருளியிருக்கிறார் வியாழ பகவான். ஓரத்தில் காணும் வில்லும் மீனும் அவர் தனுர் ராசிக்கும் மீன ராசிக்கும் அதிபதி என்பதைப் புலப்படுத்துகின்றன.*

வாசவனுர் போற்றுகுரு வாக்குக் கொருதலைவன்
தேசுறுபொன் போன்ற திருமெய்யான் - மாசில்அக்க
மாலைதண்டம் குண்டிகைசின் முத்திரைகை வைத்தகுண
சீலன் வியாழனென்று தேர்.

# சுக்கிரன்

'கொடிய அவுணர் நிருதர்தொழும் குரவன் பெயர்சுக் கிரனுகும்
படவெவ் வரவம் மருங்கசைத்துப் பரவைத் திரையின் உருத்தெழுந்த
விடமுண் டிருண்ட கண்டன்அருள் மிருதசஞ் சீவி னிஎன்னும்
ஒடிவில் விஞ்சை இனிதுணர்ந்த உரவோன் ஈங்கு வைகினனல்.'

பிருகு முனிவருடைய திருமகனுக உதித்தவன் பார்க்கவன். அவன் காசி நகரம் சென்று அங்கே லிங்கம் ஒன்றை நிறுவிப் பூசித்தான். இறைவன் காட்சி கொடுக்காததனுல் மிக வருத்தம் அடைந்து, புலன்களை அடக்கித் தவம் புரியத் தொடங்கினுன். ஆயிரம் ஆண்டுகள் கொடிய தவம் செய்ததை அறிந்த சிவபெருமான் அவன்முன் எழுந்தருளி, "நீ செய்த தவத்துக்கு உள்ளம் மகிழ்ந்தோம்" என்று சொல்லி மிருத சஞ்சீவினி என்ற மந்திரத்தை உபதேசம் செய்தான். அம் மந்திரத்தைக் கூறினுல் இறந்தவர்கள் உயிர் பெற்று எழுவார்கள்.[1]



சுக்கிரன்

நிற்பனவும் நடப்பனவுமாகிய பொருள்கள் நிறைந்த மூன்று உலகங்களையும் தாம்தாமே ஆட்சி புரிய வேண்டுமென்று தேவர்களும் அசுரர்களும் கூறி, ஒருவரை ஒருவர் பகைத்தனர். அப்போது அமரர், தாம் வெல்ல வேண்டும் என்ற நினைவினுல் பிருகஸ்பதியைத் தங்களுக்குக் குருவாகக் கொண்டு, வேள்விகளைப் புரியத் தொடங்கினர். அசுரர்கள் யாவரும் சேர்ந்து பிருகு முனிவர் புத்திரனுகிய சுக்கிரனைத் தம் குருவாகக் கொண்டனர்.

அமரருக்கும் அவுணருக்கும் போர் மூண்டது. அமரரால் போரில் உயிரிழந்த அவுணர்களைச் சுக்கிரன் மிருத சஞ்சீவினி மந்திரத்தால் உயிர்ப்பித்தான். அதனுல் அசுரர்கள் உயிர் பெற்று, மீண்டும் தேவர்களோடு பொருதனர்.[2]

---

1. காசிகாண்டம்: சுக்கிரன் உலகம் கண்ட அத்தியாயம்.
2. மகாபாரதம்: ஆதி பர்வம் - 70-ஆம் அத்தியாயம்.

ஒரு சமயம் அந்தகாசுரன் என்பவன் தேவர்களோடு அமர் செய்தான். அமரர் அசுரர்களைக் கொன்று குவித்தனர். அது கண்ட அந்தகாசுரன் சுக்கிராசாரியனிடம் சென்று, "தேவரீர் வந்து காப்பாற்றாவிட்டால் நாங்கள் பிழைப்பது அரிது" என்று முறையிடவே, சுக்கிரன் அவ்வாறே போர்க்களம் சென்று மிருத சஞ்சீவினி மந்திரத்தால் இறந்த அசுரர்களை எழுப்பினான். மீண்டும் போர் கடுமையாக நடைபெற்றது. இது கண்ட தேவர்கள் வெருவி, நந்தியினிடம் முறையிட்டுக்கொண்டார்கள். நந்தி தேவர் சிவபெருமானிடம் சென்று, "எம்பெருமானே, தேவரீர் அருளிய மந்திரத்தைக் கொண்டு பார்க்கவன் இறந்த அசுரர்களையெல்லாம் எழுப்பிவிடுகிறான். அதனால் தேவர்களுக்கு வலிமை குறைகிறது. அவர்கள் இனி உய்வது அரிது" என்று கூறினான். சிவபிரான் உடனே சுக்கிரனை அழைத்துவரச் செய்து அவனை விழுங்கித் தன் திருவயிற்றிலே இருக்கும்படி செய்தருளினான். அப்பால் அந்தகாசுரனுக்கும் தேவர்களுக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. இறைவன் திருவயிற்றில் இருந்தபடியே சுக்கிரன் யாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தான். இறைவன் அருளால் அந்தகாசுரன் அழிந்தான்.

சிவபெருமான் திருவயிற்றில் இருந்த அசுர குரு அங்கே ஆயிரம் ஆண்டு யோகத்தில் இருந்தான். அதன் பின் இறைவன் அருள் கூர்ந்து அவனை வெளியே வரச் செய்தான். அப்படி வெளிவரும்போது அவன் தூய வெண்ணிறத்தோடு வந்தமையால் அவனுக்குச் சுக்கிரன் என்னும் பெயர் உண்டாயிற்று. இறைவன் திருவயிற்றில் பல காலம் இருந்தமையால் அவனை யாவரும் வழிபட்டுப் போற்றத் தொடங்கினர்.[1]

## 2

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் மூண்ட பொழுதெல்லாம் இறந்த அசுரர்களை மிருத சஞ்சீவினி மந்திரத்தால் எழுப்பி வந்தான் சுக்கிரன்.

தேவகுருவாகிய பிருகஸ்பதிக்கு அந்த மந்திரம் தெரியாமையால் இறந்த தேவர்களை அவரால் எழுப்ப இயலவில்லை. அசுரர் கட்சி வர வர வலிமையுற்றது. இதற்கு என்ன செய்யலாம் என்று அமரர் யோசித்தனர். பிருகஸ்பதியின் புதல்வனாகிய கசனை அணுகி, 'நீ சுக்கிரனிடம் சென்று அவனுடைய திருமகளாகிய தேவயானியின் உள்ளம் உவக்கும்படி நடந்து வந்தால் மிருத சஞ்சீவினி மந்திரத்தை நீ அவனிடமிருந்து பெறலாம்' என்று சொல்லி அனுப்பினர்.

அவன் சுக்கிரனிடம் மாணவனாகச் சேர்ந்தான். தேவயானிக்கு வேண்டிய மலர் முதலிய பொருள்களைக் கொடுத்து, அவள் உள்ளத்தைக் கவர்ந்தான். கசன், தம் பகைவர் கட்சியிலிருந்து வந்தவன் என்று கண்டு அசுரர்கள் அவனைக் கொன்றனர். சுக்கிராசாரியன் அவனைச் சஞ்சீவினி மந்திரத்தால் எழுப்பினான். இப்படி இரு முறை நடைபெற்றது. மூன்றாவது முறை

1. காசி காண்டம், சுக்கிரன் உலகம் கண்ட அத்தியாயம்.

யாக அவுணர்கள் கசனைக் கொன்று கொளுத்தி மாவாய்ப் பொடி செய்து மதுவோடு கலந்து தம் ஆசிரியனுக்குக் கொடுத்தார்கள். உண்மையை அறியாது அசுர குரு அதைக் குடித்துவிட்டான். மாடுகளை மேய்த்துக் கொண்டு மாலையில் கசன் வீடு திரும்புவது வழக்கம். அவன் வராமையால் கலக்கம் அடைந்த தேவயானி தன் தந்தையிடம் கூறினாள். சுக்கிரன் மந்திரத்தைச் சொல்லவே அவன் வயிற்றிலே பொடியாகச் சென்றிருந்த கசன் அங்கே உயிர் பெற்றான். கசனை வெளிப்படுத்த வேண்டுமானால் தான் மாளவேண்டும் என்பதை அறிந்த சுக்கிரன், வயிற்றிலிருந்த அவனுக்கு அங்கிருந்தபடியே கற்றுக்கொள்ளும்படி சஞ்சீவினி மந்திரத்தை உபதேசித்தான். அதைப் பெற்ற கசன் சுக்கிரனது வயிற்றைப் பிளந்துகொண்டு வெளியில் வந்தான். அதனால் சுக்கிரன் இறந்தான். வெளிப்பட்ட கசன், மந்திர பலத்தால் சுக்கிரனை எழுப்பினான். கசன், திரும்பித் தன் தந்தையாகிய பிருகஸ்பதியை அடைந்து தான் கற்ற மந்திரத்தை அவருக்குச் சொல்லிக் கொடுத்தான்.[1]

அசுரர்களுக்கு அரசனாகிய விருஷபர்வா என்பவனுக்குச் சர்மிஷ்டை என்ற பெண் இருந்தாள். அவள் சுக்கிரன் மகளாகிய தேவயானியை அவமதித்தாள். அது கேட்ட சுக்கிரன், அசுரர்கள் தன் மாணுக்கனை மும்முறை கொன்ற பழைய கொடுமையையும், இப்போது தன் மகளைச் சர்மிஷ்டை அவமதித்ததையும் நினைந்து, "இனி நான் உன்னிடம் இருக்க மாட்டேன்" என்று அவுணர் மன்னனிடம் கூறினான். அதன் காரணத்தை உணர்ந்த விருஷபர்வா, "தேவரீர் என்ன பரிகாரம் செய்யச் சொன்னாலும் செய்கிறேன்" என்றான். தேவயானியின் விருப்பப்படி சுக்கிரன், "உன் மகளாகிய



சுக்கிரன்-ஒரு பழைய படம்

1. மகாபாரதம், ஆதிபர்வம், 70-ஆம் அத்தியாயம்.

சர்மிஷ்டை என் மகள் தேவயானிக்கு ஏவல் புரிபவளாக இருக்க வேண்டும். தேவயானி தன் கணவன் வீட்டுக்குப் போகும்போதும் அவளுடன் சர்மிஷ்டை செல்ல வேண்டும்'' என்று கூறினன். அவுணர் தலைவன் அதற்கு உடம்பட்டுச் சர்மிஷ்டையையும் இன்னும் ஆயிரம் மகளிரையும் தேவயானிக்கு ஏவலாட்டியராக அனுப்பினன்.[1]

தேவயானி, யயாதி என்னும் மன்னனை மணந்தாள். அவளுடன் சர்மிஷ்டையும் அவளுடன் இருந்த ஆயிரம் மகளிரும் சென்றனர். சில காலம் சென்ற பின் யயாதி சர்மிஷ்டையைக் காதலித்தான்; தேவயானியைப் புறக்கணித்தான். அதை அறிந்த சுக்கிரன், ''நீ மூப்பை அடைவாயாக!'' என்று சபித்தான். பிறகு அவன் பணிந்து வேண்ட, ''உன் மூப்பை யாரேனும் தன் இளமையைக் கொடுத்து மாற்றிக்கொள்ள முன் வந்தால் அவனுக்குக் கொடுக்கலாம்'' என்று அருள் செய்தான்.[2]

## 3

ஞானவாசிட்டம் என்ற நூல் ஓரிடத்தில் சுக்கிரனுடைய வரலாற்றைக் கூறுகிறது: முதலில் பிருகு புத்திரனகப் பிறந்து, அவ்வுடலை விட்டு வேறு உடலை எடுத்து, விசுவாசி என்ற தெய்வப் பெண்ணை விரும்பி, மீட்டும் தேசார்ணவம் என்ற நாட்டில் ஒரு வேதியனகப் பிறந்தான். அப்பால் கோசல நாட்டுக்குத் தலைவனுகவும் வேடனகவும் அன்னமாகவும் உருவெடுத்தான். பௌண்டர நாட்டின் தலைவனகவும் சூரிய வம்ச குருவாகவும் வித்தியாதர அரசனகவும் விளங்கினன். மறுபடியும் வேதியனுகி வேடனுகிச் சைவாசாரியனுகித் திரிந்தான். மீட்டும் மூங்கிற் காடாய் மானய் மலைப்பாம்பாய்த் தோன்றி, இறுதியில் கங்கைக் கரையில் ஒரு வேதியனகப் பிறந்து வாழ்ந்து வந்தான். அப்போது பிருகு முனிவரும் காலனும் அவனைக் கண்டு, அவனுடைய நிலையை உணர்ந்து, அருள் புரிந்து, முன்னைப் பிறப்பை உணரும் உணர்வையும் ஞானத்தையும் வழங்கினர். காலனுடைய ஆணையால் அவன் அசுர குருவானன்.[3]

அசுரர்களின் வேண்டுகோளின்படி சுக்கிரன் சிவபிரானை நோக்கிச் சில காலம் தவம் செய்தான். அப்போது இந்திரன் சயந்தியென்னும் அழகிய அணங்கை அவன்பால் அனுப்பித் தன் அழகு, ஆடல் முதலியவற்றினல் அவனை மயங்கச் செய்தான். அவள் அப்படியே சுக்கிரனை மயக்க, அவன் தவம் கலைந்து, அவளோடு அளவளாவினன். யாருடைய கண்ணுக்கும் புலப்படாமல் தனியிடம் ஒன்றில் பத்து ஆண்டுகள் அவளுடன் இன்புற்றிருந்தான். அப்போது தேவகுருவான பிருகஸ்பதி சுக்கிரனுடைய உருவத்தை எடுத்துக்கொண்டு, அசுரரிடம் சென்று, அவர்களுடன் இருந்து, அவர்களைத் தம் விருப்பப்படியே செயல் செய்யச் செய்தார். சுக்கிரன் இன்ப மயக்கத்திலிருந்து விடுபட்டு, அசுரலோகம் சென்று பார்க்கையில் வியாழ பகவான் தன் உருவோடு இருத்தலைக் கண்டான்.

---

1. மகாபாரதம், 72-74 அத்தியாயங்கள்.
2. மகாபாரதம், 75-78 ஆம் அத்தியாயங்கள்.
3. அபிதான சிந்தாமணி.



சுக்கிரன் அவ்வாறே போர்க்களம் சென்று . . .

"நான் அல்லவா உண்மையான சுக்கிரன்!" என்று கூறி வாதிட, அவுணர் அவன் கூற்றை நம்பவில்லை.

பிறகு தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் மூண்டது. அசுரர்களுக்குத் தோல்வி உண்டாகும்படி செய்து, வியாழ பகவான் மீட்டும் அமரருடன் சேர்ந்துகொண்டார். அப்போதுதான் அசுரர்களுக்கு உண்மை விளங்கியது. சுக்கிரனை அடைந்து, தாங்கள் செய்த பிழையைப் பொறுத்து, மீட்டும் தங்களுக்கு ஆசிரியராக இருந்து அருள் செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அப்படி வேண்டுகையில் தம்முடன் பிரகலாதனையும் அழைத்துக்கொண்டு சென்றார்கள். அவனை முன்னிட்டுக்கொண்டு சென்று சுக்கிரனை வேண்டவே, பார்க்கவன் அவர்கள் வேண்டுகோளை ஏற்றுப் பழையபடி அவுணரின் குலகுருவாக இருந்து அவர்களுக்கு உதவி புரியலானான்.[1]

---

1. அபிதான சிந்தாமணி

மகாபலி சக்கரவர்த்தி சுக்கிரனுடைய உபதேசத்தால் நல்ல வலிமை பெற்று, அசுவமேத யாகம் செய்தான். அவனுடைய ஆற்றலை அழிக்க வேண்டுமென்று அமரர் திருமாலிடம் வந்து முறையிட்டுக்கொண்டார் கள். திருமால் காசியபருக்குப் பிள்ளையாக வாமன உருவத்தோடு பிறந்து, பலிச்சக்கரவர்த்தியிடம் சென்றான். யாகத்தில் அந்தணர்களுக்குரிய தானங்களை வழங்குவது மரபாதலின் பலி வாமனனிடம், "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

"எனக்கு என் காலால் மூன்று அடி மண் வேண்டும்" என்றான்.

மகாபலி, "அப்படியே தருகிறேன்" என்று சொன்னபோது அவ னுடைய குலகுருவாகிய சுக்கிரன், "இவனை நீ மற்ற அந்தணர்கள் மாதிரி எண்ணாதே. உன்னிடமிருந்து வானுலகத்தைக் கைப்பற்றி இந்திரனுக்கு அதனை வழங்கும் பொருட்டுத் திருமாலே வந்திருக்கிறான்" என்று அறிவுறுத்தினான்.

"நான் சொன்ன சொல்லை மாற்ற மாட்டேன். கொடுப்பதை விலக்குவதைக் காட்டிலும் இழிந்த செயல் வேறு இல்லை. தேவரீர் எங்க ளுக்குக் குருவாக இருந்தாலும் இந்த நிலையில் தங்கள் வார்த்தையைக் கேளேன்" என்று மகாபலி சொல்லிக் கமண்டலத்தில் நீர் எடுத்து, வாமனர் கரத்தில் வார்த்தான். அப்போதும் சுக்கிரன் வண்டாக உருவெடுத்து அந்தக் கமண்டலத்திலிருந்து நீர் வரும் துவாரத்தை அடைத்துக்கொண் டான். அதை அறிந்த திருமால் ஒரு தருப்பைப் புல்லை எடுத்து அந்தத் துவாரத்தைக் குத்தவே, அது சுக்கிரனுடைய கண் ஒன்றைக் குத்தியது. சுக்கிரன் அது முதல் ஒற்றைக் கண்ணை உடையவனானான்.

சுக்கிரனைப்பற்றி வேறு பல கதைகளும் உண்டு. அவன் தன் இயல்பு அழிந்து, ஓர் அரக்கியைச் சேர்ந்து பல அரக்கர்களைப் பெற்றான் என்பது ஒரு வரலாறு. குபன் என்பவனால் மார்பு பிளப்புண்ட ததீசி முனிவரை மிருத சஞ்சீவினி மந்திரத்தால் உயிர் பெறச் செய்து, சிவ பூசை செய்யும் படி ஏவினனும். விபுதையென்னும் ஒருத்தியோடு இன்புற்று அவளிடம் கயமுகாசுரன் தோன்றும்படி செய்தான். அவன் தன் தாதையாகிய சுக்கி ரனை வணங்கவே, தவம் செய்து, வலிமை பெறும்படி உபதேசம் செய் தான்.

தண்டன் என்ற அசுரனிடம் சுக்கிரன் புரோகிதனாக இருந்தான். அப்போது சுக்கிரனுடைய குமாரியாகிய அரசை என்பவளை விரும்பி அவ் வசுரன் தீங்கு புரிந்தான். அதனை அறிந்த வெள்ளி அசுரனது நாடு காடாகுக என்று சபித்தான்.

சுக்கிரனுக்கு நான்கு குமாரர்கள்; தேவயானி, அரசை என்று இரண்டு பெண்கள்.[1]

இவன் ஒரு நீதி சாஸ்திரத்தை வழங்கினான். வடமொழியில் 'சுக்கிர நீதி' என்ற பெயருடன் உள்ள நூலே அது என்று கூறுவர்.

---

1. அபிதான சிந்தாமணி.

## 4

சுக்கிரனுக்குக் கரங்கள் நான்கு. அவற்றில் கமண்டலமும் அட்ச மாலையும் தண்டமும் வரதக் குறிப்பும் தாங்கி யிருப்பான். விஷ்ணு தர்மோத்தரம் என்ற நூலில் அவனுக்கு இரண்டு கரங்களே சொல்லப் பெறுகின்றன. அவற்றில் நிதியும் புத்தகமும் வைத்திருப்பதாக அந்நூல் கூறுகிறது. அவன் வெண்ணிறத்தான், வெள்ளாடையினன், வெள்ளித் தேர் உடையான். எட்டுக் குதிரைகளைப் பூண்ட தேர் அது.[1]

அவன் தேரைப் பத்துக் குதிரை இழுப்பதாகவும் சொல்வதுண்டு.[2]



சிவபிரான் சுக்கிரனை அழைத்துவரச் செய்து அவனை விழுங்கி....

1. Hindu Iconography by T. A. Gopinatha Rao.
2. அபிதான சிந்தாமணி.

நவக்கிரகங்களை வழிபடும் முறைகளைச் சொல்லும் வடமொழி நூல் ஒன்றில் இன்ன இன்ன மந்திரங்களைக் கூறி இன்னவாறு சுக்கிரனைப் பூசிக்க வேண்டும் என்ற செய்திகள் வருகின்றன.

வெண்ணிறம் பெற்ற திருமேனியும் நாற்கரமும் திருமுடியும் உடையவன் சுக்கிரன். பஞ்ச கோணமான பீடத்தையுடைய தேரை உடையவன். வெண்சந்தனம், வெண் மலர், வெண்மணிமாலை, வெள்ளாடை, வெண் குடை, வெண்ணிறக் கொடி ஆகியவற்றை உடையவன். மேருவை வலம் வருபவன்.

பத்மாசனம் உடையவன். கிழக்கு நோக்கி அமர்ந்திருப்பவன். சடை முடியும் மரவுரியும் தரித்தவன். கிரக மண்டலத்தில் சூரியனுக்குக் கிழக்கே பஞ்சகோண மண்டலத்தில் வைத்துப் பூசிப்பதற்கு உரியவன்.

சுக்கிரனுடைய மந்திரத்துக்குரிய முனிவர் பாரத்துவாஜர்; சந்தம் த்ரிஷ்டுப்.

சுக்கிரனுக்கு அதிதேவதை இந்திராணி. பிரத்தியதி தேவதை இந்திர மருத்துவன். இவர்கள் தத்தமக்குரிய அங்கங்களுடன் விளங்குவார்கள்.[1]

ஆனந்தமயமாக இருப்பதனால் சுக்கிரனுக்கு உசநன் என்ற பெயரும் உண்டு. பிருகுவினுடைய புத்திரனாதலால் பார்க்கவன் என்ற பெயரைப் பெற்றான். கவிகளில் சிறந்தவனாதலால் கவி என்றும் காவியன் என்றும் பெயர் பெற்றான். வெண்சுடர் வீசும் திருமேனியுடையவனாதலின் ஹிமாபன், குந்த தவளன், சுப்ராம்சு என்ற திருநாமங்களுக்கு உரியவன் ஆனான். வெள்ளாடையனாதலின் சுக்லாம்பரதரன் என்றும், வெள்ளணியணிதலால் சுக்ல பூஷணனென்றும் பெயர் பெற்றான். ஸுதீ, ஆத்மவித், வேத வேதாங்க பாரகன், மஹாமதி என்பவை அவனுடைய அறிவுத் திறத்தை விளக்குபவை. நீதிஜ்ஞன், நீதிக்ருத், நீதிமார்க்ககாமி என்பன அவனுக்கும் நீதிக்கும் உள்ள தொடர்பைப் புலப்படுத்தும் நாமங்கள். கிரகாதிபன் என்ற பெயரும் அவனுக்கு உண்டு. பிரபு என்றும் கருணை சிந்து என்றும் அவனுக்குச் சில திருநாமங்கள் வழங்கும். தைத்ய மந்திரி, தைத்ய குரு என்பன அவனுடைய பதவியினால் வந்த பெயர்கள்.[2]

சுக்கிரன் அக்கினி திக்குக்கு அதிபதி என்று சிலரும் கிழக்குத் திசைக்குத் தலைவன் என்று சிலரும் கூறுவர். அவனுக்குக் கருட வாகனம் இருப்பதாகவும் சொல்வர். அவன் களத்திர காரகன். மழை பெய்விக்க உதவுபவன்; ஆதலின் மழைக் கோள் என்ற பெயருக்கு உரியவனானான். அப்பு என்னும் பூதத்துக்கு அதிபதியாகச் சொல்வதும் உண்டு. அவனுக்கு இனிய சுவை தித்திப்பு; மணி வைரம்; தானியம் மொச்சை; மலர் வெண்டாமரை; சமித்து அத்தி; நிறம் வெண்மை.[3]

நவக்கிரகத்தின் துதியாக உள்ள கீர்த்தனங்கள் ஒன்றில் ஸ்ரீ முத்துசாமி தீட்சிதரவர்கள் சுக்கிரனுடைய பிரபாவங்களைச் சொல்கிறார்.

---

1. நவக்கிரக ஆராதனம்.
2. நவக்கிரக ஸ்தோத்திர சங்கிரகம்.
3. அபிதான சிந்தாமணி.

திருமாலால் அநுக்கிரகிக்கப் பெற்ற ஒரு கண்ணை உடையவன், முடியணிந் தவன், இருபது ஆண்டுகளை உடைய தசையைப் பெற்றவன், பண்டிதன், களத்திர பாவத்திற்கு அதிபதி, சூரியனுக்கும் பிருகஸ்பதிக்கும் பகைஞன், ராஜ்யத்தைக் கொடுப்பவன், எல்லாத் தத்துவங்களையும் அறிந்தவன், விருஷப துலா ராசிகளுக்கு அதிபதி, அசுரர்களுக்கு நன்மையை உபதேசிப் பவன் என்றும் பிறவாறும் அவனைப் போற்றுகிருர்.

'சுக்கிர தசை அடிக்கிறது' என்பது தமிழில் பழமொழியாக வழங்கு கிறது. அதிலிருந்து சுக்கிரன் நல்ல பலனை அருள்வான் என்ற நம்பிக்கை மக்கள் உள்ளத்தில் இருப்பது புலனுகிறது.

## 5

இந்தப் புத்தகத்தில் உள்ள மூவண்ண ஓவியத்தில் சுக்கிரன் சாந்த மூர்த்தியாகக் காட்சி அளிக்கிருன். வெண்திருமேனியும் வெண் குடையும் உடையவனுக விளங்குகிருன். சடையும் முடியும் நாற்கரங் களும் அந்தக் கரங்களில் அட்சமாலையும், வரதம், கமண்டலம், தண்டம் என்பனவும் உள்ளன. ஒரு கண் சற்றே மங்கியிருத்தல் வாமனுவதாரக் கதையை நினைப்பூட்டுகிறது. அவனுடைய தேர் ஐந்து கோணங்களை உடையதாகவும் எட்டுக் குதிரைகளைப் பூண்டதாகவும் இருக்கிறது. வலப் பக்கத்தில் மேகமண்டலத்தில் வீற்றிருக்கும் கோலத்தில் இருக்கும் மங்கை அதிதேவதையாகிய இந்திராணி. இடப்புறத்தில் மேகத்திடையே தோன்றுபவன் பிரத்தியதி தேவதையாகிய இந்திரமருத்துவன். கீழே மூலையில் உள்ள தராசும் விடையும் சுக்கிரன் துலாராசிக்கும் இடப ராசிக்கும் உரியவன் என்பதைக் குறிக்கின்றன.

பின்னுலே மேருமலையின் ஒரு பகுதி தோன்றுகிறது. மேருவை வலம் வருபவன் சுக்கிரன்.

வல்லவுணர் தம்குரவன் மாய்ந்தார் உயிர்பெறவே
சொல்லுமனு வைஅறிவான்; சுக்கிரன்என்-றெல்லவரும்
சாற்றும் பெரியான்; சடைமுடியான் மாரிக்கோள்:
போற்றுவெள்ளி என்றே புகல்.

# சனி பகவான்

"முனிவர்கள் தேவர் ஏனை மூர்த்திகள் முதலா னோர்கள்
மனிதர்கள் சகல வாழ்வுன் மகிமையல் லால்வே றுண்டோ?
கனிவுள தெய்வம் நீயே கதிர்சேயே, காகம் ஏறும்
சனியனே உனைத்து தித்தேன்; தமியனேற் கருள்செய் வாயே."

—நவக்கிரகத் தோத்திரம்



சனிபகவான்

திருக்கோயில்களில் நவக்கிரகங்களைத் தனியே ஓரிடத்தில் வைத்துப் பூசிக்கிறார்கள். அந்தத் தொகுதியில் இருப்பதோடு சூரியனுக்கும் சந்திரனுக்கும் தனித்தனியே இடங்கள் உண்டு. அவை இருக்கும் இடத்தை யாரும் கவனிப்பதில்லை. ஆனால் சனி பகவானுக்குத் தனியே கோயில் இருப்பதை அங்கே கூட்டமாக வழிபடும் மக்களைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம். சனி பகவானால் உண்டாகும் துன்பங்களினின்றும் நீங்க வேண்டும் என்ற ஆவல் மனிதர்களுக்கு மிகுதியாக இருப்பதுதான் காரணம்.

சூரியன் துவஷ்டாவின் பெண்ணாகிய ஸஞ்ஞிகை என்பவளை மணம் செய்து வாழ்கையில் அவர்களுக்கு வைவச்சுத மநு, யமன், யமுனை என்னும் மூவரும் சேய்களாகப் பிறந்தனர். அதன்பின் ஸஞ்ஞிகை சூரியனுடைய வெப்பத்தை ஆற்றமாட்டாதவளாகித் தன் தந்தை வீட்டுக்குப் போக எண்ணினாள். சூரியனுக்குத் தெரியாமல் செல்ல வேண்டுமென்று துணிந்து தன்னுடைய நிழலையே ஒரு பெண்ணாகச் செய்து அவளை அங்கே விட்டுவிட்டுத் தந்தையிடம் சென்றுவிட்டாள். அவளுடைய நிழலில் தோன்றியவளுக்குச் சாயாதேவி என்ற பெயர் அமைந்தது. சஞ்ஞிகையின் விருப்பப்படியே சாயாதேவி, தான் வேறு ஒருத்தி என்பதைத் தெரிவிக்காமலே சூரியனோடு வாழ்ந்தாள். சூரியனும் அவளைச் சஞ்ஞிகை என்றே எண்ணி அளவளாவி வந்தான்.

சாயாதேவி சாவர்ணீ என்ற மனுவையும் சனி பகவானையும் பத்திரை என்னும் பெண்ணையும் ஈன்முள். சஞ்ஞிகையின் குழந்தைகளிடம் விருப்பில்லாமலும் தன் சேய்களிடம் விருப்புடையவளாகவும் இருந்தாள் சாயா தேவி. யமன் இதனுல் கோபமுற்று அவளை உதைக்கப் போகையில், "உன் கால் முறியட்டும்!" என்று அவள் சாபம் இட்டாள். இந்தச் செய்தியை யமனுல் சூரியன் உணர்ந்தான். பிறகு சாயாதேவியை இன்னுரென்று அறிந்து சஞ்ஞிகையைத் தேடிச் சென்று, தவம் புரிந்துகொண்டிருந்த அவளை மீண்டும் அடைந்தான்.[1]

சூரியனுக்கும் சாயாதேவிக்கும் புதல்வனுகத் தோன்றிய சனி பகவான் காசிக்குச் சென்று, தன் பெயரினுல் ஒரு லிங்கத்தை நிறுவிப் பூசை செய்து வழிபட்டான். அதன் பயனுகக் கிரகபதவியை அடைந்து வாழலானுன்.

சனியனுடைய பீடனத்தால் துன்புற்றவர்கள் கதை பல. நளன் சனியின் தொடர்பால் மிகவும் துன்புற்று, அப்பால் அவன் தன்னை நீங்க இன்பம் அடைந்தான்.

சனி பகவானுக்கு ஒரு கால் சற்றே சிறுத்திருத்தலின் மெல்ல நடப்பான். அதனுல் சனைச்சரன் என்ற பெயர் வந்தது. யமன் அவன் காலைத் தன் தண்டத்தால் அடித்தமையால் அவ்வாறு ஆயிற்று.[2] இவனுக்குக் குளிகன் என்ற பிள்ளை ஒருவன் உண்டு.[3]

ஆகமங்களில் சனியினுடைய உருவம், உடை முதலியவற்றைப் பற்றிய செய்திகள் வருகின்றன. இவன் கரு நிறத்தான் என்றும், கரிய ஆடையை உடையவன் என்றும், குறிய உடம்பினன் என்றும், ஒரு கால் முடவனென்றும், இரு கரம் உடையான் என்றும், வலக்கரத்தில் தண்டமும் இடக்கரத்தில் வரதக் குறிப்பும் உடையவன் என்றும், பத்ம பீடத்தில் வீற்றிருப்பவனென்றும் ஓர் ஆகமம் கூறுகிறது. விஷ்ணு தர்மோத்தரம் இவன் கரங்களில் தண்டமும் அட்சமாலையும் உள்ளன என்றும், எட்டுக் குதிரைகள் பூட்டிய இரும்பு ரதத்தில் பவனி வருபவன் என்றும் தெரிவிக்கிறது.[4]


சனி—ஒரு பழைய படத்திலிருந்து

1. காசிகாண்டம், சிவசன்மா, செவ்வாய், வியாழன், சனி உலகங் கண்ட அத்தியாயம், 17-33.
2. நவக்கிரக கீர்த்தனை.
3. அபிதான சிந்தாமணி.
4. Hindu Iconography by T. A. Gopinatha Rao.



சாயாதேவியை இருத்தி விட்டுச் செல்லுதல்

இவனுக்கு உரியனவாக இருவகை மந்திரங்கள் உண்டு. ஒன்று வேத மந்திரம். அதற்கு ரிஷி இளிமிளி. அந்த மந்திரம் உஷ்ணிக் என்னும் சந்தத்தில் அமைந்தது. மற்றொரு மந்திரத்துக்கு உரியவர் மித்ர ரிஷி; அது காயத்ரீ சந்தஸை உடையது.[1]

சனிபகவான் வில்லைப்போன்ற ஆசனத்தில் வீற்றிருப்பவன்; கழுகு வாகனம் உடையவன்; மேற்கு நோக்கி வீற்றிருப்பவன்; நீலமேனி உடையவன்; முடி தரித்தவன்; சூலமும் வில்லும் வரதமும் அபயமும் கொண்ட நான்கு கரம் உடையவன்; மெல்ல நடப்பவன்; கருஞ்சந்தனம் அணிபவன்; கரு மலரையும், நீலமலர் மாலையையும் புனைபவன்; கரு நிறக்குடையும் கொடியும் கொண்டவன்; மேருவை வலம் புரிபவன்; சௌராஷ்டிர தேசத்தில் தோன்றியவன்; மகர ராசிக்கும் கும்ப ராசிக்கும் அதிபதி; நவக்கிரக மண்டலத்தில் சூரியனுக்கு மேற்கே தனுசின் உருவங் கொண்ட மண்டலத்தில் உறைபவன். இவ்வாறு நவக்கிரக ஆராதனம் என்னும் நூல் சொல்கிறது.

சனிக்கு அதிதேவதை யமன்; வலப்பக்கத்தில் இவனை ஆவாகனம் செய்யவேண்டும். இடப் பக்கத்தில் பிரத்தியதி தேவதையாகிய பிரஜாபதியை ஆவாகனம் செய்யவேண்டும்.[2]

சனி பகவானுக்குத் தமிழ் நாட்டில் எங்கும் காக்கையையே வாகனமாகச் சொல்வது வழக்கமாக இருக்கிறது. கோயில்களில் உள்ள விக்கிரகங்களிலும் காகத்தையே வாகனமாக அமைத்திருக்கிறார்கள். ‘சனிபகவான் தோத்திரம்’ என்ற நூல் பன்னிரண்டு பாடல்களால் சனிக்

---

1. தோகுவர்த்தி ஸ்வாமி குப்த ஸித்தாந்தியின் ஸித்தாந்த பஞ்சாங்க புஸ்தகம், ப. 136.
2. நவக்கிரக ஆராதனம்.

கிரகத்தைத் துதிக்கிறது.[1] அதில் வரும் ஒவ்வொரு பாடலும், "சனியனே காக மேறும் தம்பிரானே" என்று முடிகிறது.

ஆனால் வடமொழியில் உள்ள தியான சுலோகங்கள், பல இடத்தில் இவனுக்குக் கழுகையே வாகனமாகக் குறிக்கின்றன.

" சாபாஸனோ க்ருத்ர ரத:"
" நீலத்யுதிர் நீலவபு: கிரீடிக்ருத்ர ஸ்திதி :"
" ப்ரத்யங்முகம் க்ருத்ரரதம் சதுர்புஜம் "
" நீலாம்பரோ நீலவபு : கிரீடீ க்ருத்ர ஸ்தித :"
" ஜ்வாலோர்த்வ மகுடா பாஸம் நீல க்ருத்ர ரதாவஹம் "

என்று பல இடங்களில் வருவதைக் காண்க.

## 3

சனி பகவானுக்குத் தனியே நூற்றெட்டு நாமங்கள் உண்டு. வடமொழியிலும் தமிழிலும் இவனைப்பற்றிய துதிகளும் பல உண்டு.

நீரிணைஉண் டெழுமேக வண்ணா போற்றி
நெடுந்தடத்தில் உறுகமலக் கண்ணா போற்றி
சூரியன்றன் தவத்தில்வரு பாலா போற்றி
தூயநவக் கிரகத்துள் மேலா போற்றி
காரியெனும் பேர்கொள்உப காரா போற்றி
காசினியில் கீர்த்திபெற்ற தீரா போற்றி
மூரிகொளும் நோய்முகவா முடவா போற்றி
முதுமணிகள் முண்டகத்தாள் போற்றி போற்றி.

என்பது சனிபகவான் தோத்திரத்தின் கடைசிப் பாடல்,

சனிக்கு மந்தன், பிணிமுகன், முதுமகன், முடவன், காரி என்னும் பெயர்கள் தமிழ் நூல்களில் வழங்கும்.

இவனுக்கு விருப்பமான மலர், வன்னி; சமீ புஷ்பப் பிரியன் என்ற பெயரால் இதை உணரலாம். இளைத்த உடம்புடையவனாதலால் நிர்மாம்ஸ காத்ரன், சுஷ்கன், சுஷ்கோதரன் என்ற பெயர்களைப் பெற்றிருக்கிறான். இவனுடைய அர்ச்சனையில் இவனைச் சூரியன் முதலிய கிரகங்களாகவும், கணபதி, குமாரன், விஷ்ணு, சிவன் முதலிய தெய்வங்களாகவும் திருநாமங்களைக் கூறிப் பூசிக்கிறார்கள்.[2] அதனால் இவனுடைய வியாபகம் நன்கு புலனாகும்.

சனி தாமத குணம் உடையவன். மேற்குத் திசைக்கு உரியவன். இவனுக்குப் பிரியமான உலோகம் இரும்பு; மணி நீலம்; தானியம் எள்; மலர் கருங் குவளை; சுவை கசப்பு. இவனுக்கு ஜடாதரன் என்ற பெயர் இருப்பதால் சடையுடையவன் என்று தெரிகிறது.

---

1. இந் நூலைத் திருப்பனந்தாள் காசி மடத்தினர் நல்ல பதிப்பாக வெளியிட்டிருக்கிறார்கள்.
2. நவக்கிரக ஸ்தோத்திர சங்கிரகம்.

முத்துசாமி தீட்சிதரவர்கள் சனி பகவானைப்பற்றிப் பாடிய கீர்த்தனையில் இவனுடைய உருவம், குணம், செயல், உரிமை முதலிய பல செய்திகள் வருகின்றன. யமன் சனியைத் தன் தண்டத்தால் அடிக்க அதனால் அவனுடைய கால் முடமாயிற்றென்ற செய்தியை அந்தக் கீர்த்தனத்தால் தீட்சிதர் தெரிவித்திருக்கிறார். அதன் பொருள் வருமாறு: 'கதிரவனுடைய புதல்வர், மிக்க தைரியமுடையவர், சம்சார சாகரத்தில் மூழ்கும் பயத்தை உண்டு பண்ணிக் கொடிய பலன்களை அளிப்பவர், பரமசிவனுடைய கடைக்கண் நோக்குக்கு ஆளான அடியவர்களுக்கு வியக்கத் தக்க நற்பயன்களை வழங்குபவர். மையெனக் கறுத்த திருமேனியர். நீல



சனி நளனைக் காட்டுக்கு ஓட்டுதல்

உடையையும் நீல மலர்மாலை முதலியவற்றையும் அணிந்தவர். நீல மணியணிகளைப் புனைந்தவர், மாலினி மந்திரத்தால் துதிக்கப்பெற்ற குரு குகருக்குக் களிப்பு அளிப்பவர், மகர கும்ப ராசிகளுக்கு அதிபதி, எள்ளுக் கலந்த உணவிலும் நல்லெண்ணெய் விளக்கிலும் மிக்க விருப்பம் உடையவர், கருணைக் கடலனையவர், பயமற்றவர், யமனுடைய தண்டத்தால் வருந்திய முழங்காலை உடையவர், அணுகிப் பணிந்தவர் விரும்பிய பயன்களை அருள்வதில் காமதேனுவைப் போன்றவர், கால சக்கரத்தைப்பிளப்பதில் கதிரவனைப் போன்றவர், சாயா தேவியின் குமாரர், மெல்லநடப்பவர் ஆகிய சனி பகவானை எப்பொழுதும் பிரார்த்திக்கிறேன்.



சனி, காசியில் லிங்கத்தை நிறுவிப் பூசித்தல்

## 4

**ப**டத்தில், கழுகு வாகனத்தின்மேல் அமர்ந்திருக்கும் சனிபகவான் திருவுருவத்தைக் காணலாம். இவன் உருவமும் உடையும் அணியும் மணியும் மலரும், கருமையும் நீலமும் உடையனவாக ஓவியர் எழுதியிருக்கிறார். சடையுடையவனாகவும் சூலமும் வில்லும் அம்பும் பூண்டவனாகவும் காட்சி தருகிறான் சனி. வலக்கால், சற்றே மெலிந்து தோன்றுகிறது. இடப்பக்கத்தில், மேலே கும்பமும் முதலையும் உள்ளன. அவை கும்ப ராசிக்கும் மகர ராசிக்கும் இவன் தலைவன் என்பதைக் குறிப்பிக்கின்றன. பின்னே உள்ள மேருமலை, சனி அதனை வலம் வருபவன் என்பதற்குச் சான்றாக நிற்கிறது.

பார்ப்பதற்கு அச்சத்தை விளைக்கும் உருவங்கொண்ட இவனுடைய வலப்பக்கத்தில் கீழே, எருமைக் கடாவின்மேல் யமன் அமர்ந்திருக்கிறான். இவன் சனிக்கிரகத்தின் அதிதேவதை. இடப்பக்கத்தில் பிரத்தியதி தேவதையாகிய பிரஜாபதி ஆசனத்தில் வீற்றிருக்கும் கோலத்தில் தோன்றுகிறான்.

சனியை ஆயுஷ்காரகனாகச் சொல்வது சோதிட நூல். இவனை வழி பட்டு இவனுடைய அருளுக்கு உரியவர்களானால் நீண்ட ஆயுளுடன் வாழலாம். இவனைப்போல் கெடுப்பவரும் இல்லை; இவனைப்போல் கொடுப்பவரும் இல்லை.

வெய்யசுட ரோன்சாயை மேவுமகன், சூற்கரத்தான்
பைய நடக்கின்ற பங்கு, கரு—மெய்யன்
இனியன் அருளுங்கால், இன்றேல் கொடியன்,
சனியன்அவன் சீற்றம் தவிர்.

# ராகு



ராகு—பழைய படத்திலிருந்து

விப்பிரசித்தி என்ற அசுரனுக்கும் சிம்ஹிகை என்பவளுக்கும் மகனாகப் பிறந்தவன் ராகு. தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து திருப்பாற் கடலைக் கடைந்தார்கள். அதிலிருந்து அமுதம் உண்டாயிற்று. அதைத் தேவரும் அசுரரும் உண்ணுவதற்கு முந்தினார்கள். அப்பொழுது திருமால், பெண் உருவம் எடுத்தார். மோகினி என்ற பெயரோடு யாவர் உள்ளத்தையும் மயக்கும் பேரெழிலோடு அந்தப் பெண் விளங்கினாள். தேவருக்கு மாத்திரம் அமுதத்தைக் கொடுக்க வேண்டும் என்று எண்ணிய மோகினி, அசுரர்களிடம் இனிமையான பேச்சுக் கொடுத்து, வரிசையாக உட்காரும்படி சொன்னாள். அவர்கள் நான் முந்தி, நீ முந்தி என்று போட்டி போட்டுக்கொண்டு அமர்வதற்குள் தேவர்களுக்கு அமுதம் வழங்கி விட்டாள். இதனை அறிந்த ராகு என்னும் அசுரன் தேவ உருவத்தை எடுத்துக்கொண்டு சூரியனுக்கும் சந்திரனுக்கும் நடுவிலே இருந்து அமுதத்தை உண்ணத் தொடங்கினான்.

அவன் அசுரன் என்பதை அறிந்த சூரியனும் சந்திரனும் ராகுவை மோகினிக்குக் குறிப்பாகச் சுட்டிக் காட்டினார்கள். உண்மையை உணர்ந்த மோகினி, தன் கையில் உள்ள சட்டுவத்தால் அடித்தாள். திருமாலுக்குரிய சக்கரத்தால் அவன் தலையை அறுத்தாள்.

அமுதத்தை உண்ட அசுரனுடைய தலை, மலையின் கொடுமுடியைப் போலப் பெரிதாக இருந்தது. அது நிலத்தின்மேல் விழும்போது தரை முழுவதும் பூகம்பம் உண்டானாற்போல அதிர்ந்தது.[1]

தலையுடன் இரண்டு கைகளும் சேர்ந்து விழுந்தன. மற்றப் பகுதி தனியே வேறு இடத்தில் விழுந்தது. தலையும் கைகளும் சேர்ந்த பகுதி பர்ப்பர தேசத்தில் விழுந்தது. பைடீனஸன் என்பவன் ஸிம்ஹிகையுடன் அங்கே போய்க்கொண் டிருந்தான். அவர்கள் இருவரும் ராகுவாகிய அவனைத் தம் அரண்மனைக்குக் கொண்டுபோய் வளர்த்துவந்தனர்.[2]

அமுதம் உண்டமையால் ராகு சாவாமல் வளர்ந்தான். சூரிய சந்திரர்கள் தன்னைக் குறிப்பித்த காரணத்தால் அவர்களிடம் அவனுக்குப் பகை மூண்டது. அவர்களைப் பீடிக்கத் தொடங்கினான். கிரகணம் என்பது அதுதான்.

---

1. மகாபாரதம், ஆதிபர்வம், 19-ஆம் அத்தியாயம்.
2. Hindu Pantheon by Moore, p. 200.

ராகுவின் தலை இயல்பானது; பின்பு அவனுக்குப் பாம்பின் உடம்பு இணைந்தது. திருமாலை நோக்கித் தவம் இயற்றிக் கரிய பாம்பின் உருவத்தைப் பெற்ருன். தவத்தின் வலிமையால் கிரக பதவியை அடைந்தான்.[1]

ராகுவையும் கேதுவையும் முறைப்படி கிரகங்கள் என்று சொல்வதில்லை. இவற்றைச் சாயாக் கிரகங்கள் என்று சொல்வார்கள். ராகு, மேருவை அப்பிரதட்சிணமாகச் சுற்றிவருகிருன்.

## 2

சிற்ப ரத்தினம் என்ற நூல் ராகுவின் திருவுருவத்தை அமைக்கும் விதத்தைச் சொல்கிறது. சிங்காதனத்தில் வீற்றிருப்பவனுகவும், வரதம், கட்கம், கேடகம், சூலம் என்பவற்றை ஏந்தும் நாற்கரங்களை உடையவனுகவும் அவனுடைய உருவ வருணனை அந்நூலில் வருகிறது. இரண்டு கரங்களை உடையவனுகி, வலக்கையில் புத்தகமும் கம்பளியும் வைத்திருப்பானென்றும், இடக்கையில் ஒன்றையும் ஏந்தாமல் இருப்பானென்றும், எட்டுக் குதிரைகளைப் பூட்டிய வெள்ளி ரதத்தில் ஏறி வருவானென்றும் விஷ்ணு தர்மோத்தரம் சொல்கிறது.[2]

'கயானச்சித்ர' எனத் தொடங்கும் மந்திரம் ராகுவை வழிபடுவதற்கு உரியது. அந்த மந்திரத்தின் ரிஷி வாமதேவர்; சந்தம் காயத்திரி. முறத்தைப்போன்ற ஆசனத்தில் அவன் வீற்றிருப்பான். நிருதி திசைக்கு உரியவன். அவன் வரதம், சூலம், கேடகம் ஏந்தியவன். கரிய



ராகு, தேவ உருவத்தோடு அமுதம் உண்டான்

1. அபிதான சிந்தாமணி.
2. Hindu Iconography by T. A. Gopinatha Rao.


மோகினி, சட்டுவத்தால் அடித்தல்

உடையை உடையவன். கருமேனி பெற்றவன். முடி தரித்தவன். நாற்கரம் உடையவன். சிங்கத்தில் ஏறுபவன்.

கருஞ் சந்தனம், கரிய மலர், கரிய மாலை, கரிய உடை, கரிய குடை, கரிய கொடி ஆகியவற்றை உடையவன் ராகு. பைடீனஸ கோத்திரத்தில் உதித்தவன்.

சூரிய மண்டலத்தில் சூரியக் கிரகத்திற்குத் தென்மேற்கில் ஆவாகனம் செய்து பூசித்தல் மரபு.

ராகுவின் அதிதேவதை பசு; பிரத்தியதிதேவதை பாம்பு.[1]

இவனுக்கு அமுத கடிகன் என்று ஒரு பிள்ளை உண்டென்று கூறுவர். ராகு உருவத்தால் நெடியோன். தாமத குணம் உடையவன். கருங்கல்லும் கோமேதகமும் இவன் விருப்பத்துக்கு உரியவை. இவனுக்குரிய தானியம் உளுந்து. மந்தாரை மலரும் அறுகும் இவனை அருச்சிப்பதற்கு உரியவை. புளிப்புச் சுவையில் விருப்பம் உடையவன் இவன். இவனுக்கு ஆட்டையும் வாகனமாகச் சொல்வது உண்டு.[2]

இவனுடைய தியான சுலோகம் ஒன்றில், இவன் கரிய சிங்காதனத்தில் வீற்றிருப்பான், பாம்பு உருவமுடையவன், ஸிம்ஹிகையின் திருமகன், பக்தர்களுக்கு அபயம் தருபவன், முடியணிந்தவன் என்ற செய்திகள் வருகின்றன.[3]

தானவ மந்திரி, ஸிம்ஹிகா சித்ர நந்தனன், அர்த்த காயன், ஸதாக்ரோதீ, சந்த்ராதித்ய விமர்த்தனன், ரௌத்ரன், ருத்ரப்ரியன்,

1. நவக்கிரக ஆராதனம்.
2. அபிதான சிந்தாமணி.
3. ஸித்தாந்த பஞ்சாங்கம்.

பானுபீதிதன், க்ரகராஜன், காலரூபன், ஸ்ரீகண்ட ஹ்ருதயாச்ரயன், ஸைம்ஹிகேயன், கோரரூபன், மஹாபலன், க்ரகபீடாகரன், தம்ஷ்ட்ரீ, ரக்தநேத்ரன், மஹோதரன் என்ற பெயர்கள் இவனுக்கு வழங்குகின்றன.'

ராகுவின் மண்டலம் சூரியமண்டலத்துக்குக் கீழே இருக்கிறது. இவன் அமாவாசை, பௌர்ணமி காலங்களில் சூரியனையும் சந்திரனையும் மறைத்துத் திருமால் சக்கராயுதத்தை ஏவப் பின்பு அகலுவான்.[2]

முத்துசாமி தீட்சிதர் இயற்றிய கீர்த்தனத்திலிருந்து ராகுவைப் பற்றிப் பின்வரும் செய்திகள் தெரிய வருகின்றன:

'சூரிய சந்திரர்களுடன் கிரகண காலத்தில் காணற்குரியவன்; விகாரமான உடலை உடையவன்; அசுரனாக இருந்து, தேவனாக மாறிய உடம்புடையவன்; நோயைப் போக்குபவன்; பாம்பு முதலிய விஷப்பிராணிகளால் உண்டாகும் பயத்தை ஒழிப்பவன்; முறத்தை ஆசனமாகக் கொண்டவன்; கயான மந்திரத்துக்கு உரியவன்; கருணை பெருகும் கடைக்கண் நோக்குடையவன்; நாற்கரத்தோன்; கத்தி, கேடயம் ஆகிய படையை ஏந்தியவன்; தோல் முதலிய கரிய உடையை உடையவன்; கோமேதகத்தை அணிந்தவன்; சனிக்கும் சுக்கிரனுக்கும் நண்பன்; ஞான குருவாகிய முருகனுக்கு மகிழ்ச்சியை அளிப்பவன்.'

## 3

ராகுவின் ஓவியத்தில் அவனுடைய உருவம் அச்சத்தைத் தருவதாக இருக்கிறது. திருமுகம் மாத்திரம் தேவனைப் போல இருப்பினும் உடல் முழுவதும் செதில்கள் அமைந்து பாம்பு, என்பதைப் புலப்படுத்துகின்றன. சூலமும் கட்கமும் ஏந்திய கைகளும் வரதமுடைய கை ஒன்றும், சும்மா தொங்கப்போட்ட கை ஒன்றும் உடைய கோலத்தில் கரிய உடையோடு தோலையும் அணிந்து வீற்றிருக்கிறான். மேலே உள்ள சிங்கக் கொடி, அவனுடைய வாகனமும் அது என்பதை உய்த்துணர வைக்கிறது. கொடியும் குடையும் கருநிறம் உடையன. முறத்தைப் போன்ற ஆசனத்தில் ராகு வீற்றிருக்கிறான்.

வலப்பக்கத்தில் அதிதேவதையாகிய பசுவையும் இடப்புறம் பிரத்தியதி தேவதையாகிய சர்ப்பத்தையும் காண்கிறோம். மேருவை இடமாகச் சுற்றுபவன் ராகு; பின்னால் உள்ள மலை இதைக் குறிப்பிக்கின்றது. பின்னே நிலைக்களம் பயங்கரமாக அமைந்திருக்கிறது.

கரவின் அமுதுண்டான்; கார்நிறத்தான்; மேனி
அரவம் முகம்அமரன் ஆனான்; - மருவுமுறம்
ஆகும் இருக்கையான்; அஞ்சுதகு தோற்றத்தான்;
ராகுநிழற் கோளென் றிசை.

1. நவக்கிரக ஸ்தோத்திர ஸங்கிரஹம்.
2. பாகவதம், 5.5:3.

# கேது



கேது - ஒரு பழைய படம்

ராகுவினுடைய கதைக்கும் கேதுவினுடைய கதைக்கும் ஆரம்பம் ஒன்றுதான். தேவர்கள் அமுதத்தை உண்டபோது அவர்களோடு தேவ உருவம் எடுத்த அசுரன் ஒருவன் அமுதத்தை உண்பதைச் சூரியனும் சந்திரனும் பார்த்தார்கள். அந்தச் செய்தியை அமுதத்தைப் பகிர்ந்து அளித்துக்கொண்டிருந்த மோகினிக்குத் தெரிவித்தனர். திருமாலே மோகினி உருவம் எடுத்திருந்தாராதலின் அவர் தம்முடைய சக்கரத்தால், திருட்டுத்தனமாக அமுதத்தை உண்ட அசுரன் தலையை அறுத்தார். தலைவேறு, உடல் வேறாக அசுரன் துண்டிக்கப் பட்டான்.

சக்கரத்தால் துண்டிக்கப் பெற்ற பிறகும், அமுதம் உண்ட சிறப்பினால் அந்த இரண்டு துண்டங்களும் தனித்தனியே இயங்கத் தொடங்கின. தலை ராகுவென்றும் உடம்பு கேதுவென்றும் பெயர் பெற்று, உயிரோடு வாழலாயின.[1]

தலையை இழந்த உடம்பாகிய கேது பின்பு விஷ்ணுவை நோக்கித் தவஞ்செய்து பாம்புத் தலையைப் பெற்றான். கேது செம்பாம்பு உருவமுடையவன் என்றும் சொல்வது உண்டு.[2]

வெட்டுண்ட உடம்பாகிய கேது தேவலோகத்திலிருந்து பூமியில் மலையத்தில் விழுந்தது. அங்கே இருந்த மினி என்ற பிராம்மணன் அவனை எடுத்துப் பாதுகாத்து வந்தான். அவனைத் தன் மகனென்றே கொண்டு அன்புடன் வளர்த்து வந்தான்.[3]

---

1. மகாபாரதம், ஆதிபர்வம், 19-ஆம் அத்தியாயம்.
2. அபிதான சிந்தாமணி.
3. Hindu Pantheon by Moore, p. 200

கேதுவினுடைய நிறம் கறுப்பென்றும், அவன் இரண்டு கரங்களை உடையவன் என்றும், ஒரு கை அபயத்தை உடையதென்றும், மற்றொன்று கதையை ஏந்தியதென்றும் கூறுவர். விசுவகர்ம சிற்ப சாஸ்திரத்தில் அவனுடைய தேர், பத்துக் குதிரைகள் பூட்டியது என்ற செய்தி வருகிறது.[1]

ஸ்ரீ முத்துசாமி தீட்சிதர் பாடிய கீர்த்தனையில் உள்ள செய்திகள்.

அசுரர்களுக்குள் பெரியவன் கேது. சாயாக்கிரகங்களில் சிறந்தவன்; பலவகை மணிகள் இழைத்த பெரிய திருமுடியைக் கவித்தவன்; மஞ்சள் முதலிய பல வண்ணமுடைய ஆடையைப் புனைந்தவன்; மனித உடலாகிய பீடத்தில் இனிதே எழுந்தருளியிருப்பவன்; புதிதாய்க் கிரக பதவியைப் பெற்ற ராகுவினுடன் இணைந்திருப்பவன். அவனுடைய அதிதேவதை பிரம்மா. அவனுடைய மந்திரம் 'கேதும் க்ருண்வன்' என்ற தொடக்கத்தை உடையது. கேது, மிக்க கோபம் உடையவன்; ஜைமினி கோத்திரத்தில் பிறந்தவன்; கொள்ளு முதலியவற்றை உண்பவன்; முக்கோண வடிவத்தைப் பெற்ற கொடியை ஏந்தியவன்; முருக வேளுக்கு வெண் கவரியை வீசுபவன்; குணங்களையும் குறைகளையும் வென்ற ஞானிகளுக்கு அணியாக இருப்பவன்; கிரகணம் முதலியவற்றிற்குக் காரணமானவன்; வான வீதியில் மேருவை இடமாகச் சுற்றி வருகிறவன்.

## 2

வேத மந்திரமாகிய 'கேதும் க்ருண்வன்' என்பதற்கு ரிஷி மதுச்சந்தர்; அதற்குரியது காயத்திரிச் சந்தம். அதனையன்றி, 'ஓம் க்ரூம்' என்று தொடங்கும் மற்றொரு மந்திரமும் உண்டு. அது ஜயச்சந்த ரிஷியையும் காயத்திரிச் சந்தத்தையும் உடையது.[2]



கேதுவின் படம்

நவக்கிரக ஆராதனக் கிரமத்தைக் கூறும் நூலில் வேத மந்திரத்துக்குரிய அங்கந்யாச கரந்யாசங்களும் உள்ளன. கொடிபோன்ற ஆசனத்தில் வீற்றிருப்பவன் கேது. அந்தர்வேதி தேசத்தவன். விசித்திர வண்ணத்தை உடையவன். வாயு திசைக்கு உரியவன். அவனுக்கு எட்டுப் பிள்ளைகள் உண்டு. அவன் புகைநிற மேனி பெற்றவன். வரதமும் கதையும் ஏந்திய கரங்கள்

1. Hindu Iconography.
2. சித்தாந்த பஞ்சாங்கம்

இரண்டை உடையவன். கழுகின்மேல் ஊர்பவன். முடியும் தோள்வளையும் பிற அணிகளும் அணிந்திருப்பவன். அமைதியான தோற்றம் உடையவன். அவனுக்குப் பல வண்ணச் சந்தனமும், பல வண்ண மலரும் விருப்ப மானவை. அவன் ஆடை, குடை, கொடி யாவும் பல நிறம் உடையவை. நல்ல தேர் உடையவன் அவன். மேருவை அப்பிரதட்சிணமாகச் சுற்றுபவன்.

கேதுவினுடைய அதிதேவதை சித்திரகுப்தன்; பிரத்தியதி தேவதை பிரம்மா.[1]

கேது, கரிய நிறமுடையவனாதலின் காலன் என்ற பெயரும் அவனுக்கு வழங்கும். தூம்ரகேது, லோககேது, மஹாகேது, ஸர்வகேது முதலிய பல பெயர்கள் அவனுக்கு உண்டு. ரௌத்ரன் என்ற பெயர் அவனுக்கு இருப்பதனால் அவன் சினமுடையவன் என்று தெரிகிறது.

கேதுவை அலியென்றும் நெடிய உருவம் உடையவனென்றும் சொல்வ துண்டு. அவனுக்குப் பிரியமான ரத்தினம் வைடூரியம். அவனுக்கு உரிய தானியம் கொள். அவனைப் பூசிப்பதற்கு உரிய மலர் செவ்வல்லி அவனுக்கு விருப்பமான சுவை புளிப்பு; சிங்க வாகனமும் அவனுக்கு உண்டென்று கூறுவர். அவனுடைய தேரை ஆறு குதிரைகள் இழுத்துச் செல்வதாக ஒருசாரார் கொள்வர்.[2]

## 3

படத்தில் கருநிற மேனியனாகிய கேதுவைப் பார்க்கிறோம். அவன் இடமாக வரும் மேரு செந்நிறத்தோடு பின்னே தோற்றம் அளிக் கிறது. கேதுவின் வலப்பக்கத்தில் ஏடும் எழுத்தாணியுமாக உட்கார்ந் திருப்பவன் சித்திரகுப்தன். அவனே கேதுவுக்கு அதிதேவதை.

இடப்பக்கத்தில் நான்முகன் வீற்றிருக்கிறான். அவனுடைய மூன்று முகம் முன்னே தெரிய மற்றொரு முகம் அப்பால் மறைந்திருக்கிறது. அவன்தான் கேதுவின் பிரத்தியதி தேவதை.

கேது, கழுகு வாகனத்தின்மேல் கொடியின் உருவமைந்த ஆசனத்தில் எழுந்தருளியிருக்கிறான். அவன் தலையில் சிவப்பு, நீலம், மஞ்சள் முதலிய பன்னிற மணிகள் பதித்த பெரிய கிரீடம் மின்னுகிறது. அதற்குமேலே குடை, நிழல் தருகிறது. அவனுடைய முகம் செதில்களை உடையதாய்ப் பாம்புமுகம் என்பதைக் குறிப்பிக்கிறது. அவனுடைய விழிகளில் உள்ள சிவப்பு அவன் சினமுடையவன் என்பதற்குச் சாட்சி சொல்கிறது. அவனுடைய வலக்கை அபயமாகவும் இடக்கை கதையை ஏந்தியதாகவும் இருக்கின்றன. ஆடையில் பல வண்ணங்கள் கலந்திருக்கின்றன.

பொன்னங் கிரிஇடமாப் போதுவான்; மோகினியால்
முன்னம் தலையிழந்த மூர்த்தியான்—மன்னுகையில்
மோதுகதை அஞ்சல்உள்ளான் மூண்ட கருநிறத்தான்
கேதுஎன்று சொல்வர் கிளந்து.

1. நவக்கிரக ஆராதனம், ப. 14.
2. அபிதான சிந்தாமணி.

# முத்துசாமி தீட்சிதர் இயற்றிய

## நவக்கிரக கீர்த்தனைகள்

### சூரியன்

### सौराष्ट्ररागे - ध्रुवतालेन गीयते

पल्लवी

सूर्यमूर्ते नमोऽस्तु ते सुन्दरच्छायाधिपते (सूर्य०)

अनुपल्लवी

कार्यकारणात्मकजगत्प्रकाशक सिंहराश्यधिपते
आर्यविनुततेजःस्फूर्ते आरोग्यादिफलदकीर्ते (सूर्य०)

चरणम्

सारसमित्र मित्र भानो सहस्रकिरण कर्णसूनो
क्रूरपापहर कृशानो गुरुगुहमोदित स्वभानो
सूरिजनेडितसुदिनमणे सोमादिग्रहशिखामणे
धीरार्चितकर्मसाक्षिणे दिव्यतरसप्ताश्वरथिने
सौराष्ट्रार्णमन्त्रात्मने सौवर्णस्वरूपात्मने
भारतीशहरिहरात्मने भुक्तिमुक्तिवितरणात्मने (सूर्य०)

**ஸௌராஷ்ட்ர ராகம்** | **துருவ தாளம்**

பல்லவி

*ஸூர்யமூர்த்தே நமோஸ்து தே, ஸுந்தரச்சாயாதிபதே (ஸூர்ய)*

அநுபல்லவி

*கார்யகாரணாத்மகஜகத்ப்ரகாசக ஸிம்ஹராச்யதிபதே*
*ஆர்யவிநுததேஜஸ்ஸ்பூர்த்தே, ஆரோக்யாதிபலதகீர்த்தே (ஸூர்ய)*

சரணம்

*ஸாரஸமித்ர மித்ர பானோ, ஸஹஸ்ரகிரண கர்ணஸூனோ*
*க்ரூரபாபஹர க்ருஶானோ, குருகுஹமோதித ஸ்வபானோ*
*ஸூரிஜனேடிதஸுதினமணே, ஸோமாதிக்ரஹசிகாமணே*
*தீரார்ச்சிதகர்மஸாக்ஷிணே, திவ்யதரஸப்தாஶ்வரதினே.*
*ஸௌராஷ்டார்ணமந்த்ராத்மனே, ஸௌவர்ணஸ்வரூபாத்மனே*
*பாரதீஶஹரிஹராத்மனே, பக்திமுக்திவிதரணாத்மனே (ஸூர்ய)*

---

### சந்திரன்

### असावेरिरागे - मठ्यतालेन

**पल्लवी**

चन्द्रं भज मानस साधुहृदयसदृशम् (चन्द्रं०)

**अनुपल्लवी**

इन्द्रादिलोकपालेडिततारेशम्
इन्दुं षोडशकलाधरं निशाकरम्
इन्दिरासहोदरं सुधाकरमनिशम् (चन्द्रं०)

**चरणम्**

शङ्करमौलिविभूषणं शीतकिरणम्
चतुर्भुजं मदनच्छत्रं क्षपाकरम्
वेङ्कटेशनयनं विराण्मनोजननम्
विधुं कुमुदमित्रं विधिगुरुगुहवक्त्रम्
शशाङ्कं गीष्पतिशापानुग्रहपात्रम्
शरच्चन्द्रिकाधवलप्रकाशगात्रम्
कङ्कणकेयूरहारमुकुटादिधरम्
पङ्कजरिपुं रोहिणीप्रियकरचतुरम् (चन्द्रं०)

அஸாவேரி ராகம் மட்ய தாளம்

**பல்லவி**

*சந்த்ரம் பஜ மானஸ ஸாதுஹ்ருதயஸத்ருசம் (சந்த்ரம்)*

**அநுபல்லவி**

*இந்த்ராதிலோகபாலேடிததாரேஶம்*
*இந்தும் ஷோடஶகலாதரம் நிஶாகரம்*
*இந்திராஸஹோதரம் ஸுதாகரமநிஶம் (சந்த்ரம்)*

**சரணம்**

*ஶங்கரமௌளிவிபூஷணம் சீதகிரணம்*
*சதுர்புஜம் மதனச்சத்ரம் க்ஷபாகரம்*
*வேங்கடேஶநயனம் விராண்மநோஜனனம்*
*விதும் குமுதமித்ரம் விதிகுருகுஹவக்த்ரம்*
*ஶஶாங்கம் கீஷ்பதிஶாபாநுக்ரஹபாத்ரம்*
*ஶரச்சந்த்ரிகாதவலப்ரகாஶகாத்ரம்*
*கங்கணகேயூரஹாரமுகுடாதிதரம்*
*பங்கஜரிபும் ரோஹிணீப்ரியகரசதுரம் (சந்த்ரம்)*

---

अंगாரகன்

सुरटिरागे - रूपकतालेन

पल्लवी

अङ्गारकमाश्रयाम्यहं विनताश्रितजनमन्दारम्
मङ्गलवारं भूमिकुमारं वारं वारम् (अङ्गा०)

अनुपल्लवी

शृङ्गारकमेषवृश्चिकराश्यधिपतिं
रक्ताङ्गं रक्ताम्बरादिधरं शक्तिशूलधरम्
मङ्गलं कम्बुगलं मञ्जुलतरपदयुगलम्
मङ्गलदायकमेषतुरङ्गं मकरोत्तुङ्गम् (अङ्गा०)

चरणम्

दानवसुरसेवितमन्दस्मितविलसितवक्त्रम्
धरणीप्रदं भ्रातृकारकं रक्तनेत्रम्
दीनरक्षकं पूजितवैद्यनाथक्षेत्रम्
दिव्यौघादिगुरुगुहकटाक्षानुग्रहपात्रम्
भानुचन्द्रगुरुमित्रं भासमानसुकलत्रं
जानुस्थहस्तचित्रं चतुर्भुजं अतिविचित्रम (अङ्गा०)

ஸூரடி ராகம் ரூபக தாளம்

பல்லவி

*அங்காரகமாஶ்ரயாம்யஹம் விநதாஶ்ரிதஜனமந்தாரம்*
*மங்கலவாரம் பூமிகுமாரம் வாரம் வாரம் (அங்கா)*

அநுபல்லவி

*ஶ்ருங்காரகமேஷவ்ருஶ்சிகராஶ்யதிபதிம்*
*ரக்தாங்கம் ரக்தாம்பராதிதரம் ஶக்திஶூலதரம்*
*மங்கலம் கம்புகலம் மஞ்ஜுலதரபதயுகலம்*
*மங்கலதாயகமேஷதுரங்கம் மகரோத்துங்கம் (அங்கா)*

சரணம்

*தானவஸூரஸேவிதமந்தஸ்மிதவிலஸிதவக்த்ரம்*
*தரணீப்ரதம் ப்ராத்ருகாரகம் ரக்தநேத்ரம்*
*தீனரக்ஷகம் பூஜிதவைத்யநாதக்ஷேத்ரம்*
*திவ்யௌகாதிகுருகுஹகடாக்ஷாநுக்ரஹபாத்ரம்*
*பாநுசந்த்ரகுருமித்ரம் பாஸமானஸூகலத்ரம்*
*ஜாநுஸ்தஹஸ்தசித்ரம் சதுர்புஜம் அதிவிசித்ரம் (அங்கா)*

---

புதன்

नाटकुरञ्जिरागे - झम्पतालेन

पल्लवी

बुधमाश्रयामि सततं, सुरविनुतं चन्द्रतारासुतम् (बुध०)

अनुपल्लवी

बुधजनैर्वेदितं भूसुरैर्मोदितम्
मधुरकवितापदं महनीयसम्पदम् (बुध०)

चरणम्

कुङ्कुमसमद्युतिं गुरुगुहमुदाकृतिम्
कुजवैरिणं मणिमुकुटहारकेयूरकङ्कणादिधरणम्
कमनीयतरमिथुनकन्याधिपं पुस्तककरं नपुंसकम्
किङ्करजनमहितं किल्बिषादिरहितम्
शङ्करभक्तहितं सदानन्दसहितम् (बुध०)

நாடகுறிஞ்சி ராகம் ஜம்ப தாளம்

பல்லவி

*புதமாம்ரயாமி ஸததம், ஸுரவிநுதம் சந்த்ரதாராஸுதம் (புத)*

அநுபல்லவி

*புதஜனைர்வேதிதம் பூஸுரைர்மோதிதம்*
*மதுரகவிதாப்ரதம் மஹநீயஸம்பதம் (புத)*

சரணம்

*குங்குமஸமத்யுதிம் குருகுஹமுதாக்ருதிம்*
*குஜவைரிணம் மணிமுகுடஹாரகேயூரகங்கணாதிதரணம்*
*கமநீயதர மிதுனகன்யாதிபம் புஸ்தககரம் நபும்ஸகம்*
*கிங்கரஜனமஹிதம் கில்பிஷாதிரஹிதம்*
*மங்கரபக்தஹிதம் ஸதானந்தஸஹிதம் (புத)*

---

பிருகஸ்பதி

अठाणारागे - त्रिपुटतालेन

पल्लवी

बृहस्पते तारापते ब्रह्मजाते नमोऽस्तु ते (बृह०)

अनुपल्लवी

महाबलविभो गीष्पते मञ्जुधनुर्मीनाधिपते
महेन्द्राद्युपासिताकृते माधवादिविनुत धीमते (बृह०)

चरणम्

सुराचार्यवर्य वज्रधर शुभलक्षण जगत्त्रयगुरो
जरादिवर्जिताक्रोध कचजनकाश्रितजनकल्पतरो
पुरारिगुरुगुहसंमोदित पुत्रकारक दीनबन्धो
परादिचत्वारिवाक्स्वरूपप्रकाशक दयासिन्धो
निरामयाय नीतिकर्त्रे निरङ्कुशाय विश्वभर्त्रे
निरञ्जनाय भुवनभोक्त्रे निरंशाय मखप्रदात्रे (बृह०)

அடாணு ராகம் த்ரிபுட தாளம்

பல்லவி

ப்ருஹஸ்பதே தாராபதே ப்ரஹ்மஜாதே நமோஸ்து தே (ப்ரு)

அநுபல்லவி

மஹாபலவிபோ கீஷ்பதே மஞ்ஜுதநுர்மீனுதிபதே
மஹேந்த்ராத்யுபாஸிதாக்ருதே மாதவாதிவிநுத தீமதே (ப்ரு)

சரணம்

ஸுராசார்யவர்ய வஜ்ரதர சுபலக்ஷண ஜகத்த்ரயகுரோ
ஜராதிவர்ஜிதாக்ரோத கசஜனகாச்ரிதஜனகல்பதரோ
புராரிகுருகுஹஸம்மோதித புத்ரகாரக தீனபந்தோ
பராதிசத்வாரிவாக்ஸ்வரூபப்ரகாசக தயாஸிந்தோ
நிராமயாய நீதிகர்த்ரே நிரங்குசாய விச்வபர்த்ரே
நிரஞ்ஜனாய புவனபோக்த்ரே நிரம்சாய மகப்ரதாத்ரே (ப்ரு)

---

சுக்கிரன்

परजूरागे - अटतालेन

पल्लवी

श्रीशुक्रभगवन्तं चिन्तयामि संततं सकलतत्त्वज्ञम् (श्री०)

अनुपल्लवी

हे शुक्रभगवन् मां आशु पालय
वृषतुलाधीश दैत्यहितोपदेश
केशवकटाक्षैकनेत्रं किरीटधरं धवलगात्रम् (श्री०)

चरणम्

विंशतिवत्सरोडुदशाविभागमष्टवर्गं
कविं कलत्रकारक रविनिर्जरगुरुवैरिणम्

नवांशहोराद्रेक्काणादिवर्गोत्तमावसरसमये
वक्रोच्चनीचस्वक्षेत्रवरकेन्द्रमूलत्रिकोणे
त्रिंशांशषष्ट्यंशैरावतांशपारिजातांशगोपु-
रांशराजयोगकारकं राज्यप्रदं गुरुगुहमुदम् (श्री०)

பருஜ் ராகம் அட தாளம்

பல்லவி

*ஶ்ரீஶுக்ரபகவந்தம் சிந்தயாமி ஸந்ததம் ஸகலதத்வக்ஞம் (ஶ்ரீ)*

அநுபல்லவி

*ஹே ஶுக்ரபகவந் மாம் ஆசு பாலய*
*வ்ருஷதுலாதீஶ தைத்யஹிதோபதேஶ*
*கேஶவகடாக்ஷகநேத்ரம் கிரீடதரம் தவலகாத்ரம் (ஶ்ரீ)*

சரணம்

*விம்சதிவத்ஸரோடுதசாவிபாகமஷ்டவர்க்கம்*
*கவிம் கலத்ரகாரகம் ரவிநிர்ஜரகுருவைரிணம்*
*நவாம்ஶஹோராத்ரேக்காணாதிவர்க்கோத்தமாவஸரஸமயே*
*வக்ரோச்சநீசஸ்வக்ஷேத்ரவரகேந்த்ரமூலத்ரிகோணே*
*த்ரிம்ஶாம்ஶஷஷ்ட்யம்ஶைராவதாம்ஶபாரிஜாதாம்ஶகோபு-*
*ராம்ஶராஜ்யோககாரகம் ராஜ்யப்ரதம் குருகுஹமுதம் (ஶ்ரீ)*

---

சனி

## यदुकुलकाम्भोजिरागे - एकतालेन

पल्लवी

दिवाकरतनुजं शनैश्चरं धीरतरं संततं चिन्तयेऽहम् (दिवा०)

अनुपल्लवी

भवाम्बुनिधौ निमग्नजनानां भयङ्करं अतिक्रूरफलदम्
भवानीशकटाक्षपात्रभूतभक्तिमतामतिशयशुभफलदम् (दिवा०)

चरणम्

कालाञ्जनकान्तियुक्तदेहं कालसहोदरं काकवाहम्
नीलांशुकपुष्पमालावृतं नीलरत्नभूषणालंकृतम्
मालिनीविनुतगुरुगुहमुदितं मकरकुम्भराशिनाथम्
तिलतैलमिश्रितान्नदीपप्रियं दयासुधासागरं निर्भयम्
कालदण्डपरिपीडितजानुं कामितार्थफलदकामधेनुम्
कालचक्रभेदचित्रभानुं कल्पितच्छायादेवीसूनुम् (दिवा०)

**யதுகுல காம்போதி ராகம்** **ஏக தாளம்**

பல்லவி

*திவாகரதநுஜம் ஶனைஶ்சரம் தீரதரம் ஸந்ததம் சிந்தயேஹம் (திவா)*

அநுபல்லவி

*பவாம்புநிதௌ நிமக்நஜநாநாம் பயங்கரம் அதிக்ரூரபலதம்*
*பவானீஶகடாக்ஷபாத்ரபூதபக்திமதாமதிஶயஶுபபலதம் (திவா)*

சரணம்

*காலாஞ்ஜனகாந்தியுக்ததேஹம் காலஸஹோதரம் காகவாஹம்*
*நீலாம்சுகபுஷ்பமாலாவ்ருதம் நீலரத்னபூஷணாலங்க்ருதம்*
*மாலினீவிநுதகுருகுஹமுதிதம் மகரகும்பராஶிநாதம்*
*திலதைலமிஶ்ரிதான்னதீபப்ரியம் தயாஸுதாஸாகரம் நிர்ப்பயம்*
*காலதண்டபரிபீடிதஜாநும் காமிதார்த்தபலதகாமதேநும்*
*காலசக்ரபேதசித்ரபாநும் கல்பிதச்சாயாதேவீஸூநும் (திவா)*

---

ராகு

## रमामनोहरीरागे - रूपकतालेन

पल्लवी

स्मराम्यहं सदा राहुं सूर्यचन्द्रवीक्ष्यं विकृतदेहम् (स्मरा०)

अनुपल्लवी

सुरासुरं रोगहरं सर्पादिभीतिहरम्
शूर्पासनसुखकरं शूलायुधधरकरम् (स्मरा०)

चरणम्

करालवदनं कठिनं कयानार्णकरुणार्द्रापाङ्गम्
चतुर्भुजं खड्गखेटादिधरणम्
चर्मादिनीलवस्त्रं गोमेधकाभरणम्
शनिशुक्रमित्रगुरुगुहसन्तोषकारणम् (स्मरा०)

**ரமா மநோஹரீ ராகம்** **ரூபக தாளம்**

பல்லவி

*ஸ்மராம்யஹம் ஸதா ராஹும் ஸூர்யசந்த்ரவீக்ஷ்யம் விக்ருததேஹம் (ஸ்ம)*

அநுபல்லவி

*ஸுராஸுரம் ரோகஹரம் ஸர்ப்பாதிபீதிஹரம்*
*ஶூர்ப்பாஸனஸுககரம் ஶூலாயுததரகரம் (ஸ்ம)*

சரணம்

கராலவதனம் கடினம் கயாஞர்ணகருஞர்த்ராபாங்கம்
சதுர்புஜம் கட்ககேடாதிதரணம்
சர்மாதிநீலவஸ்த்ரம் கோமேதகாபரணம்
ஶனிசுக்ரமித்ரகுருகுஹஸந்தோஷகாரணம் (ஸ்ம)

---

## கேது

## चामररागे - रूपकतालेन

### पल्लवी

महासुरं केतुमहं भजामि छायाग्रहवरम् (महा०)

### अनुपल्लवी

महाविचित्रमुकुटधरं मङ्गलवस्त्रादिधरम्
नरपीठस्थितं सुखं नवग्रहयुतं सखम् (महा०)

### चरणम्

केतुं-कृण्वन्-मन्त्रिणं क्रोधनिधिजैमिनम्
कुलुत्थादिभक्षणं कोणध्वजपताकिनम्
गुरुगुहचामरभरणं गुणदोषजिताभरणम्
ग्रहणादिकार्यकारणं ग्रहापसव्यसंचारिणम् (महा०)

சாமர ராகம் — ரூபக தாளம்

பல்லவி

மஹாஸுரம் கேதுமஹம் பஜாமி சாயாக்ரஹவரம் (மஹா)

அநுபல்லவி

மஹாவிசித்ரமுகுடதரம் மங்கலவஸ்த்ராதிதரம்
நரபீடஸ்திதம் ஸுகம் நவக்ரஹயுதம் ஸகம் (மஹா)

சரணம்

கேதும்-க்ருண்வன்-மந்த்ரிணம் க்ரோதநிதிஜைமினம்
குலுத்தாதிபக்ஷணம் கோணத்வஜபதாகினம்
குருகுஹசாமரபரணம் குணதோஷஜிதாபரணம்
க்ரஹணாதிகார்யகாரணம் க்ரஹாபஸவ்யஸஞ்சாரிணம் (மஹா)

---

# நவக்கிரக தியான சுலோகம்

சூரியன்

ध्यायेत् सूर्यमनन्तशक्तिकिरणं तेजोमयं भास्करम्
भक्तानामभयप्रदं दिनकरं ज्योतिर्मयं शङ्करम् ।
आदित्यं जगदीशमच्युतमजं त्रैलोक्यचूडामणिम्
भक्ताभीष्टवरप्रदं दिनमणिं मार्ताण्डमाद्यं शुभम् ॥ १ ॥

द्विभुजं पद्महस्तं च वरदं मुकुटान्वितम् ।
ध्यायेद्दिवाकरं देवं सर्वाभीष्टफलप्रदम् ॥ २ ॥

पद्मासनः पद्मकरः पद्मगर्भसमद्युतिः ।
सप्ताश्वरथसंस्थश्च द्विभुजः स्यात्सदा रविः ॥ ३ ॥

जपाकुसुमसंकाशं काश्यपेयं महाद्युतिम् ।
तमोऽरिं सर्वपापघ्नं प्रणतोऽस्मि दिवाकरम् ॥ ४ ॥

शोणाम्भोरुहसुस्थितं त्रिणयनं वेदत्रयीविग्रहम्
दानाम्भोजयुगाभयानि दधतं हस्तैः प्रवालप्रभम् ।
केयूराङ्गदहारकङ्कणधरं कर्णोल्लसत्कुण्डलम्
लोकोत्पत्तिविपत्तिपालनकरं सूर्यं गुणाब्धिं भजे ॥ ५ ॥

*த்யாயேத் ஸூர்யமனந்தஶக்திகிரணம் தேஜோமயம் பாஸ்கரம்*
*பக்தாநுமபயப்ரதம் தினகரம் ஜ்யோதிர்மயம் ஶங்கரம்,*
*ஆதித்யம் ஜகதீஶமச்யுதமஜம் த்ரைலோக்யசூடாமணிம்*
*பக்தாபீஷ்டவரப்ரதம் தினமணிம் மார்த்தாண்டமாத்யம் ஶுபம்.* 1

*த்விபுஜம் பத்மஹஸ்தம் ச வரதம் முகுடாந்விதம்*
*த்யாயேத் திவாகரம் தேவம் ஸர்வாபீஷ்டபலப்ரதம்.* 2

*பத்மாஸன: பத்மகர: பத்மகர்ப்பஸமத்யுதி:*
*ஸப்தாஶ்வரதஸம்ஸ்தஶ்ச த்விபுஜ: ஸ்யாத் ஸதா ரவி:.* 3

*ஜபாகுஸுமஸங்காஶம் காஶ்யபேயம் மஹாத்யுதிம்*
*தமோரிம் ஸர்வபாபக்னம் ப்ரணதோஸ்மி திவாகரம்.* 4

ஶாம்போருஹஸுஸ்திதம் த்ரிணயநம் வேதத்ரயீவிக்ரஹம்
தாம்போஜயுகாபயானி தததம் ஹஸ்தை: ப்ரவாலப்ரபம்
கேயூராங்கதஹாரகங்கணதரம் கர்ணோல்லஸத்குண்டலம்
லோகோத்பத்திவிபத்திபாலனகரம் ஸூர்யம் குணப்திம் பஜே. 5

---

சந்திரன்

श्वेताम्बरोज्ज्वलतनुं सितमाल्यगन्धम्
श्वेताश्वयुक्तरथगं सुरसेविताङ्घ्रिम् ।
दोर्भ्यां धृताभयगदं वरदं सुधांशुं
श्रीवत्समौक्तिकधरं प्रणमामि चन्द्रम् ॥ १ ॥
श्वेतः श्वेताम्बरधरो दशाश्वः श्वेतभूषणः ।
गदापाणिर्द्विबाहुश्च कर्तव्यो वरदः शशी ॥ २ ॥
सोमं द्विभुजपद्मं च मुक्ताभरणभूषणम् ।
श्वेताश्वरथमारूढं मेरुं यान्तं प्रदक्षिणम् ॥ ३ ॥
शुभ्रं चतुर्भुजं देवं केयूरमुकुटोज्ज्वलम् ।
वासुदेवस्य नयनं शङ्करस्य च भूषणम् ॥ ४ ॥
दधिशङ्खतुषाराभं क्षीरोदार्णवसंभवम् ।
नमामि शशिनं सोमं शम्भोर्मुकुटभूषणम् ॥ ५ ॥

ஶ்வேதாம்பரோஜ்வலதனும் ஸிதமால்யகந்தம்
ஶ்வேதாஶ்வயுக்தரதகம் ஸுரஸேவிதாங்க்ரிம்
தோர்ப்யாம் த்ருதாபயகதம் வரதம் ஸுதாம்ஶும்
ஶ்ரீவத்ஸமௌக்திகதரம் ப்ரணமாமி சந்த்ரம். 1

ஶ்வேத: ஶ்வேதாம்பரதரோ தசாஶ்வ: ஶ்வேதபூஷண:
கதாபாணிர் த்விபாஹுஶ்ச கர்த்தவ்யோ வரத: ஶஶீ: 2

ஸோமம் த்விபுஜபத்மம் ச முக்தாபரணபூஷணம்
ஶ்வேதாஶ்வரதமாரூடம் மேரும் யாந்தம் ப்ரதக்ஷிணம். 3

சுப்ரம் சதுர்புஜம் தேவம் கேயூரமுகுடோஜ்வலம்
வாஸுதேவஸ்ய நயனம் ஶங்கரஸ்ய ச பூஷணம்: 4

ததிஶங்கதுஷாராபம் க்ஷீரோதார்ணவஸம்பவம்
நமாமி ஶஶினம் ஸோமம் ஶம்போர்முகுடபூஷணம். 5

செவ்வாய்

रक्तमाल्याम्बरधरः शक्तिशूलगदाधरः ।
चतुर्भुजो मेषगमो वरदः स्याद्धरासुतः ॥ १ ॥
मङ्गलो भूमिपुत्रश्च ऋणहर्ता धनप्रदः ।
स्थिरासनो महाकायः सर्वकामफलप्रदः ॥ २ ॥
लोहितो लोहिताक्षश्च सामगानां कृपाकरः ।
धरात्मजः कुजो भौमो भूमिदो भूमिनन्दनः ॥ ३ ॥
अङ्गारको यमश्चैव सर्वरोगापहारकः ।
वृष्टेः कर्ता च हर्ता च सर्वदेवैश्च पूजितः ॥ ४ ॥
नमाम्यङ्गारकं देवं रक्ताङ्गं वरभूषणम् ।
चतुर्भुजं मेषवाहं वरदं च वराकृतिम् ॥ ५ ॥
शक्तिशूलगदाहस्तं ज्वालापुञ्जोर्ध्वकेशकम् ।
मेरुं प्रदक्षिणं यान्तं सर्वदेवेष्टसिद्धिदम् ॥ ६ ॥
धरणीगर्भसंभूतं विद्युत्कान्तिसमप्रभम् ।
कुमारं शक्तिहस्तं च मङ्गलं प्रणमाम्यहम् ॥ ७ ॥

*ரக்தமால்யாம்பரதர: ஶக்திசூலகதாதர:*
*சதுர்புஜோ மேஷகமோ வரத: ஸ்யாத் தராஸுத:.* 1
*மங்கலோ பூமிபுத்ரஶ்ச ருணஹர்த்தா தனப்ரத:*
*ஸ்திராஸனோ மஹாகாய: ஸர்வகாமபலப்ரத:.* 2
*லோஹிதோ லோஹிதாக்ஷஶ்ச ஸாமகாநாம் க்ருபாகர:*
*தராத்மஜ: குஜோ பௌமோ பூமிதோ பூமிநந்தன:.* 3
*அங்காரகோ யமஶ்சைவ ஸர்வரோகாபஹாரக:*
*விருஷ்டே: கர்த்தா ச ஹர்த்தா ச ஸர்வதேவைஶ்ச பூஜித:.* 4
*நமாம்யங்காரகம் தேவம் ரக்தாங்கம் வரபூஷணம்*
*சதுர்புஜம் மேஷவாஹம் வரதம் ச வராக்ருதிம்.* 5
*ஶக்திசூலகதாஹஸ்தம் ஜ்வாலாபுஞ்ஜோர்த்வகேஶகம்*
*மேரும் ப்ரதக்ஷிணம் யாந்தம் ஸர்வதைவேஷ்டஸித்திதம்.* 6
*தரணீகர்ப்பஸம்பூதம் வித்யுத்காந்திஸமப்ரபம்*
*குமாரம் ஶக்திஹஸ்தம் ச மங்கலம் ப்ரணமாம்யஹம்.* 7

---

புதன்

भुजैश्चतुर्भिर्वरदाभयासि-
गदा वहन्तं सुमुखं प्रशान्तम् ।

पीतप्रभं चन्द्रसुतं सुरेड्यं
सिंहे निषण्णं बुधमाश्रयामि ॥ १ ॥

बुधं पुस्तकहस्तं च पीतपुष्पसमद्युतिम् ।
ध्यायेज्ज्ञानमयं देवं प्रसन्नं च चतुर्भुजम् ॥ २ ॥

खड्गशूलगदापाणिं वरमुद्राङ्कितं प्रभुम् ।
पीताम्बरधरं देवं पीतमाल्यानुलेपनम् ॥ ३ ॥

वज्राद्याभरणोपेतं किरीटमुकुटोज्ज्वलम् ।
पीताश्वरथमारुह्य मेरुं यान्तं प्रदक्षिणम् ॥ ४ ॥

प्रियङ्गुकलिकाश्यामं रूपेणाप्रतिमं बुधम् ।
सौम्यं सौम्यगुणोपेतं तं बुधं प्रणमाम्यहम् ॥ ५ ॥

*புஜைஶ்சதுர்பிர்வரதாபயாஸிகதா வஹந்தம் ஸுமுகம் ப்ரஶாந்தம்*
*பீதப்ரபம் சந்த்ரஸுதம் ஸுரேட்யம் ஸிம்ஹே நிஷண்ணம்*
*[புதமாஶ்ரயாமி:* 1

*புதம் புஸ்தகஹஸ்தம் ச பீதபுஷ்பஸமத்யுதிம்*
*த்யாயேத் ஞானமயம் தேவம் ப்ரஸந்நம் ச சதுர்புஜம்.* 2

*கட்கசூலகதாபாணிம் வரமுத்ராங்கிதம் ப்ரபும்*
*பீதாம்பரதரம் தேவம் பீதமால்யாநுலேபனம்.* 3

*வஜ்ராத்யாபரணோபேதம் கிரீடமுகுடோஜ்வலம்*
*பீதாஶ்வரதமாருஹ்ய மேரும் யாந்தம் ப்ரதக்ஷிணம்.* 4

*ப்ரியங்குகலிகாஶ்யாமம் ரூபேணாப்ரதிமம் புதம்*
*ஸௌம்யம் ஸௌம்யகுணோபேதம் தம் புதம் ப்ரணமாம்யஹம்.* 5

---

குரு

वराक्षमालिकादण्डकमण्डलुधरं विभुम् ।
पुष्परागाङ्कितं पीतं वरदं भावयेद्गुरुम् ॥ १ ॥

तप्तकाञ्चनवर्णाभं चतुर्भुजसमन्वितम् ।
दण्डाक्षसूत्रहस्तं च कमण्डलुवरान्वितम् ॥ २ ॥

पीताम्बरधरं देवं पीतगन्धानुलेपनम् ।
पुष्परागमयाभूषं विचित्रमुकुटोज्ज्वलम् ॥ ३ ॥

स्वर्णाश्वरथमारूढं पीतध्वजसुशोभितम् ।
मेरोः प्रदक्षिणं सम्यगाचरन्तं सुशोभनम् ॥ ४ ॥

अभीष्टवरदं देवं सर्वज्ञं सुरपूजितम् ।
सर्वकार्यार्थसिद्ध्यर्थं प्रणमामि गुरुं सदा ॥ ५ ॥

देवानां च ऋषीणां च गुरुं काञ्चनसन्निभम् ।
बुद्धिभूतं त्रिलोकस्य तं नमामि बृहस्पतिम् ॥ ६ ॥

*வராக்ஷமாலிகா தண்டகமண்டலுதரம் விபும்*
*புஷ்பராகாங்கிதம் பீதம் வரதம் பாவயேத் குரும்.* 1
*தப்தகாஞ்சனவர்ணபம் சதுர்புஜஸமந்விதம்*
*தண்டாக்ஷஸூத்ரஹஸ்தம் ச கமண்டலுவரான்விதம்.* 2
*பீதாம்பரதரம் தேவம் பீதகந்தானுலேபனம்*
*புஷ்பராகமயாபூஷம் விசித்ரமுகுடோஜ்வலம்.* 3
*ஸ்வர்ணஸ்வரதமாரூடம் பீதத்வஜஸுஸோபிதம்*
*மேரோ: ப்ரதக்ஷிணம் ஸம்யகாசரந்தம் ஸுஸோபனம்.* 4
*அபீஷ்டவரதம் தேவம் ஸர்வக்ஞம் ஸுரபூஜிதம்*
*ஸர்வகார்யார்த்தஸித்யர்த்தம் ப்ரணமாமி குரும் ஸதா.* 5
*தேவானாம் ச ரிஷீணாம் ச குரும் காஞ்சநஸந்நிபம்*
*புத்திபூதம் த்ரிலோகஸ்ய தம் நமாமி ப்ருஹஸ்பதிம்.* 6

---

சுக்கிரன்

जटिलं साक्षसूत्रं च वरदण्डकमण्डलून् ।
श्वेतवस्त्रावृतं शुक्रं ध्यायेद्दानवपूजितम् ॥ १ ॥
शुक्रं चतुर्भुजं देवं साक्षमालाकमण्डलुम् ।
दण्डहस्तं च वरदं द्युतिजालसुशोभितम् ॥ २ ॥
शुक्लाम्बरधरं पूज्यं शुक्लमाल्यानुलेपनम् ।
वज्राभरणसंयुक्तं किरीटमुकुटोज्ज्वलम् ॥ ३ ॥
श्वेतवाहरथारूढं मेरुं यान्तं प्रदक्षिणम् ।
पञ्चाश्रमण्डलगतं पद्मस्थं चिन्तयाम्यहम् ॥ ४ ॥
मृणालकुन्देन्दुपयोहिमप्रभं
सिताम्बरं स्निग्धवलक्षमालिनम् ।
समस्तशास्त्रश्रुतितत्त्वदर्शनं
ध्यायेत् कविं वाञ्छितवस्तुसिद्धये ॥ ५ ॥
हिमकुन्दमृणालाभं दैत्यानां परमं गुरुम् ।
सर्वशास्त्रप्रवक्तारं भार्गवं प्रणमाम्यहम् ॥ ६ ॥

*ஜடிலம் ஸாக்ஷஸூத்ரம் ச வரதண்டகமண்டலூன்*
*ஸ்வேதவஸ்த்ராவ்ருதம் சுக்ரம் த்யாயேத் தானவபூஜிதம்.* 1
*சுக்ரம் சதுர்புஜம் தேவம் ஸாக்ஷமாலாகமண்டலும்*
*தண்டஹஸ்தம் ச வரதம் த்யுதிஜாலஸுஸோபிதம்.* 2

*சுக்லாம்பரதரம் பூஜ்யம் சுக்லமால்யாநுலேபனம்*
*வஜ்ராபரணஸம்யுக்தம் கிரீடமுகுடோஜ்வலம்.* 3

*ஶ்வேதவாஹரதாரூடம் மேரும் யாந்தம் ப்ரதக்ஷிணம்*
*பஞ்சாஶ்ரமண்டலகதம் பத்மஸ்தம் சிந்தயாம்யஹம்.* 4

*ம்ருணாலகுந்தேந்துபயோஹிமப்ரபம்*
*ஸிதாம்பரம் ஸ்நிக்தவலர்க்ஷமாலினம்*
*ஸமஸ்தஶாஸ்த்ரஶ்ருதிதத்வதர்சனம்*
*த்யாயேத் கவிம் வாஞ்சிதவஸ்துஸித்தயே.* 5

*ஹிமகுந்தம்ருணாலாபம் தைத்யாணும் பரமம் குரும்*
*ஸர்வஶாஸ்த்ரப்ரவக்தாரம் பார்க்கவம் ப்ரணமாம்யஹம்.* 6

---

சனி

चतुर्भुजं शनिं देवं चापतूणीकृपाणकैः ।
सहितं वरदं भीमदंष्ट्रं नीलोत्पलाकृतिम् ॥ १ ॥
नीलमाल्यानुलेपं च नीलरत्नैरलंकृतम् ।
ज्वालोर्ध्वमुकुटाभासं नीलगृध्ररथान्वितम् ॥ २ ॥
मेरुं प्रदक्षिणं यान्तं सर्वलोकभयावहम् ।
कृष्णाम्बरधरं देवं द्विभुजं गृध्रसंस्थितम् ।
सर्वपीडाहरं नृणां ध्यायेद्ग्रहगणोत्तमम् ॥ ३ ॥
चापासनो गृध्ररथोऽतिनीलः
प्रत्यङ्मुखः काश्यपगोत्रजातः ।
सशूलचापेषुगदाधरोऽव्यात्
सौराष्ट्रदेशप्रभवश्च सौरिः ॥ ४ ॥
नीलाम्बरो नीलवपुः किरीटी
गृध्रस्थितस्त्रासकरो धनुष्मान् ।
चतुर्भुजः सूर्यसुतः प्रशान्तः
सदास्तु मह्यं वरदः प्रसन्नः ॥ ५ ॥
शनैश्चराय शान्ताय सर्वाभीष्टप्रदायिने ।
नमः सर्वात्मने तुभ्यं नमो नीलाम्बराय च ॥ ६ ॥
द्वादशाष्टमजन्मर्क्षे द्वितीयस्थान एव च ।
त्वत्सञ्चारोद्भवा दोषाः सर्वे नश्यन्तु मे प्रभो ॥ ७ ॥

नीलाञ्जनसमानाभं रविपुत्रं यमाग्रजम् ।
छायामार्तण्डसंभूतं तं नमामि शनैश्चरम् ॥ ८ ॥

*சதுர்புஜம் சனிம் தேவம் சாபதூணீக்ருபாணகை:*
*ஸஹிதம் வரதம் பீமதம்ஷ்ட்ரம் நீலோத்பலாக்ருதிம்.* 1

*நீலமால்யாநுலேபம் ச நீலரத்னைரலங்கிருதம்*
*ஜ்வாலோர்த்வமுகுடாபாஸம் நீலக்ருத்ரரதாந்விதம்.* 2

*மேரும் ப்ரதக்ஷிணம் யாந்தம் ஸர்வலோகபயாவஹம்*
*க்ருஷ்ணம்பரதரம் தேவம் த்விபுஜம் க்ருத்ரஸம்ஸ்திதம்*
*ஸர்வபீடாஹரம் ந்ருணும் த்யாயேத் க்ரஹகணோத்தமம்.* 3

*சாபாஸனோ க்ருத்ரரதோதிநீல: ப்ரத்யங்முக: காஶ்யபகோத்ரஜாத:*
*ஸசூலசாபேஷுகதாதரோவ்யாத் ஸௌராஷ்ட்ரதேஶப்ரபவஶ்ச*
*ஸௌரி:.* 4

*நீலாம்பரோ நீலவபு: கிரீடீ க்ருத்ரஸ்திதஸ்த்ராஸகரோ தனுஷ்மான்*
*சதுர்புஜ: ஸூர்யஸுத: ப்ரஶாந்த: ஸதாஸ்து மஹ்யம் வரத: ப்ரஸன்ன:* 5

*ஶனைஶ்சராய ஶாந்தாய ஸர்வாபீஷ்டப்ரதாயினே*
*நம: ஸர்வாத்மனே துப்யம் நமோ நீலாம்பராய ச.* 6

*த்வாதஶாஷ்டமஜன்மர்க்ஷே த்வீதீயஸ்தான ஏவ ச*
*த்வத்ஸஞ்சாரோத்பவா தோஷா: ஸர்வே நச்யந்து மே ப்ரபோ.* 7

*நீலாஞ்ஜனஸமாநாபம் ரவிபுத்ரம் யமாக்ரஜம்*
*சாயாமார்த்தண்டஸம்பூதம் தம் நமாமி ஶனைஶ்சரம்.* 8

---

ராகு

करालवदनं खड्गचर्मशूलवरान्वितम् ।
नीलसिंहासनस्थं च ध्यायेद्राहुं प्रशान्तये ॥ १ ॥
प्रणमामि सदा राहुं सर्पाकारं किरीटिनम् ।
सैंहिकेयं करालास्यं भक्तानामभयप्रदम् ॥ २ ॥
राहुं चतुर्भुजं चर्मशूलखड्गवराङ्कितम् ।
कृष्णमाल्याम्बरधरं कृष्णगन्धानुलेपनम् ॥ ३ ॥
गोमेधकविभूषं च विचित्रमुकुटान्वितम् ।
कृष्णसिंहरथं मेरुं यान्तं चैवाऽप्रदक्षिणम् ॥ ४ ॥
अर्धकायं महावीर्यं चन्द्रादित्यविमर्दनम् ।
सिंहिकागर्भसंभूतं तं राहुं प्रणमाम्यहम् ॥ ५ ॥

கராலவதனம் கட்கசர்மசூலவராந்விதம்
நீலஸிம்ஹாஸனஸ்தம் ச த்யாயேத் ராஹும் ப்ரஶாந்தயே. 1

ப்ரணமாமி ஸதா ராஹும் ஸர்ப்பாகாரம் கிரீடினம்
ஸைம்ஹிகேயம் கராலாஸ்யம் பக்தாநாமபயப்ரதம். 2

ராஹும் சதுர்புஜம் சர்மசூலகட்கவராங்கிதம்
க்ருஷ்ணமால்யாம்பரதரம் க்ருஷ்ணகந்தாநுலேபனம். 3

கோமேதகவிபூஷம் ச விசித்ரமுகுடாந்விதம்
க்ருஷ்ணஸிம்ஹரதம் மேரும் யாந்தம் சைவாப்ரதக்ஷிணம். 4

அர்த்தகாயம் மஹாவீர்யம் சந்திராதித்யவிமர்த்தனம்
ஸிம்ஹிகாகர்ப்பஸம்பூதம் தம் ராஹும் ப்ரணமாம்யஹம். 5

---

## கேது

धूम्रवर्णं द्विबाहुं च केतुं च विकृताननम् ।
गृध्रासनगतं नित्यं ध्यायेत् सर्वफलाप्तये ॥ १ ॥

धूम्रवर्णं ध्वजाकारं गदावरकरद्वयम् ।
चित्राम्बरधरं केतुं चित्रगन्धानुलेपनम् ॥ २ ॥

वैदूर्याभरणं चैव वैदूर्यमुकुटोज्ज्वलम् ।
चित्रं कपोतमारुह्य मेरुं यान्तमदक्षिणम् ॥ ३ ॥

केतुं करालवदनं चित्रवर्णं किरीटिनम् ।
प्रणमामि सदा देवं ध्वजाकारं ग्रहेश्वरम् ॥ ४ ॥

पलाशपुष्पसंकाशं तारकाग्रहमस्तकम् ।
रौद्रं रौद्रात्मकं घोरं तं केतुं प्रणमाम्यहम् ॥ ५ ॥

தூம்ரவர்ணம் த்விபாஹும் ச கேதும் ச விக்ருதாननம்
க்ருத்ராஸனகதம் நித்யம் த்யாயேத் ஸர்வபலாப்தயே. 1

தூம்ரவர்ணம் த்வஜாகாரம் கதாவரகரத்வயம்
சித்ராம்பரதரம் கேதும் சித்ரகந்தாநுலேபனம். 2

வைதூரியாபரணம் சைவ வைதூர்யமுகுடோஜ்வலம்
சித்ரம் கபோதமாருஹ்ய மேரும் யாந்தமதக்ஷிணம். 3

கேதும் கராலவதனம் சித்ரவர்ணம் கிரீடினம்
ப்ரணமாமி ஸதா தேவம் த்வஜாகாரம் க்ரஹேஶ்வரம். 4

பலாஶபுஷ்பஸங்காஶம் தாரகாக்ரஹமஸ்தகம்
ரௌத்ரம் ரௌத்ராத்மகம் கோரம் தம் கேதும் ப்ரணமாம்யஹம். 5

---

# நவக்கிரக மங்களாஷ்டகம்

## சூரியன்

भास्वानर्कसमिच्च रक्तकिरणः सिंहाधिपः काश्यपो
गुर्विन्दोश्च कुजस्य मित्रमरि-ख-त्रि-स्थः शुभः प्राङ्मुखः ।
शत्रुर्भार्गवसौरयोः प्रियगुडः कालिङ्गदेशाधिपो
मध्ये वर्तुलमण्डले स्थितिमितः कुर्यात् सदा मङ्गलम् ॥ १ ॥

*பாஸ்வானர்க்கஸமிச்ச ரக்தகிரண: ஸிம்ஹாதிப: காம்ஶ்யபோ*
*குர்விந்தோம்ஶ்ச குஜஸ்ய மித்ரமரி-க-த்ரி-ஸ்த: சுப: ப்ராங்முக:*
*ஶத்ருர்பார்க்கவஸௌரயோ: ப்ரியகுட: காலிங்கதேஶாதிபோ*
*மத்யே வர்த்துலமண்டலே ஸ்திதிமித: குர்யாத் ஸதா மங்கலம்.* 1

## சந்திரன்

चन्द्रः कर्कटकप्रभुः सितरुचिश्चात्रेयगोत्रोद्भव-
श्चाग्नेये चतुरश्रगोऽपरमुखो गौर्यर्चया तर्पितः ।
षट्-सप्ताग्नि-दशाद्यशोभनफलोऽशत्रुर्बुधार्कप्रियः
सौम्यो यामुनदेशपर्णजसमित्कुर्यात् सदा मङ्गलम् ॥ २ ॥

*சந்த்ர: கர்க்கடகப்ரபு: ஸிதருசிஶ்சாத்ரேயகோத்ரோத்பவஶ்-*
*சாக்னேயே சதுரஶ்ரகோபரமுகோ கௌர்யர்ச்சயா தர்ப்பித:*
*ஷட்-ஸப்தாக்னி-தசாத்யஶோபனபலோசத்ருர் புதார்க்கப்ரிய:*
*ஸௌம்யோ யாமுனதேஶபர்ணஜஸமித் குர்யாத் ஸதா மங்கலம்.* 2

## செவ்வாய்

भौमो दक्षिणदिक्त्रिकोणनिलयोऽवन्तीपतिः खादिर-
प्रीतो वृश्चिकमेषयोरधिपतिर्गुर्वर्कचन्द्रप्रियः ।
ज्ञारिः षट्-त्रिशुभप्रदश्च वसुधादाता गुहाधीश्वरो
भारद्वाजकुलोद्भवोऽरुणरुचिः कुर्यात् सदा मङ्गलम् ॥ ३ ॥

*பௌமோ தக்ஷிணதிக்த்ரிகோணநிலயோவந்தீபதி: காதிர-*
*ப்ரீதோ வ்ருஶ்சிகமேஷயோரதிபதிர்குர்வர்க்கசந்த்ரப்ரிய:*
*ஜ்ஞாரி: ஷட்-த்ரிசுபப்ரதஶ்ச வஸுதாதாதா குஹாதீஶ்வரோ*
*பாரத்வாஜகுலோத்பவோருணருசி: குர்யாத் ஸதா மங்கலம்.* 3

புதன்

सौम्यः पीत उदङ्मुखः समिधपामार्गोऽत्रिगोत्रोद्भवो
बाणेशानगतः सुहृद्रविसितो वैरीकृतानुष्णरुक् ।
कन्यायुग्मपतिर्दशाष्टमचतुष्षण्णेत्रगः शोभनो
विष्णवाराधनतर्पितो मगधपः कुर्यात् सदा मङ्गलम् ॥ ४ ॥

*ஸௌம்ய: பீத உதங்முகஸ் ஸமிதபாமார்க்கோத்ரிகோத்ரோத்பவோ*
*பாணேஶானகதஸ் ஸுஹ்ருத்ரவிஸிதோ வைரீக்ருதானுஷ்ணருக்*
*கன்யாயுக்மபதிர் தஶாஷ்டமசதுஷ்ஷண்ணேத்ரகஶ் ஶோபனோ*
*விஷ்ண்வாராதனதர்ப்பிதோ மகதப: குர்யாத் ஸதா மங்கலம்.*

பிருகஸ்பதி

जीवश्चोत्तरदिङ्मुखोत्तरककुब्जातोऽङ्गिरो गोत्रतः
पीतोऽश्वत्थसमिच्च सिन्ध्वधिपतिश्चापर्क्षमीनाधिपः ।
सूर्येन्दुक्षितिजप्रियः सितबुधारातिः समो भानुजे
सप्तापत्यतपोऽर्थगः शुभकरः कुर्यात् सदा मङ्गलम् ॥ ५ ॥

*ஜீவஶ்சோத்தரதிங்முகோத்தரககுப்ஜாதோங்கிரோ கோத்ரத:*
*பீதோஶ்வத்தஸமிச்ச ஸிந்த்வதிபதிஶ்சாபர்க்ஷமீனாதிப:*
*ஸூர்யேந்துக்ஷிதிஜப்ரிய: ஸிதபுதாராதிஸ் ஸமோ பானுஜே*
*ஸப்தாபத்யதபோர்த்தகஶ் சுபகர: குர்யாத் ஸதா மங்கலம்.*

சுக்கிரன்

शुक्रो भार्गवगोत्रजः सितरुचिः पूर्वाननः पूर्वदिक्
काम्भोजाधिपतिस्तुलावृषभपश्चौदुंबरैस्तर्पितः ।
सौम्याक्र्योस्सुहृदम्बिकास्तुतिवशात् प्रीतोऽर्कचन्द्राहितो
नारीभोगकरः शुभो भृगुसुतः कुर्यात् सदा मङ्गलम् ॥ ६ ॥

*சுக்ரோ பார்க்கவகோத்ரஜ: ஸிதருசி: பூர்வானன: பூர்வதிக்*
*காம்போஜாதிபதிஸ் துலாவ்ருஷபபஶ் சௌதும்பரைஸ்தர்ப்பித:*
*ஸௌம்யார்க்யோஸ்ஸுஹ்ருதம்பிகாஸ்துதிவஶாத் ப்ரீதோர்க்க-*
*சந்த்ராஹிதோ*
*நாரீபோககரஶ் சுபோ ப்ருகுஸுத: குர்யாத் ஸதா மங்கலம்.* 6

சனி

सौरिः कृष्णरुचिश्च पश्चिममुखः सौराष्ट्रपः काश्यपो
नाथः कुम्भमृगर्क्षयोः प्रियसुहृच्छुक्रज्ञयोर्गृध्रपः ।

षट्त्रिस्थः शुभदोऽशुभो तनुगतिश्चापाकृतौ मण्डले
संतिष्ठन् चिरजीवितादिफलदः कुर्यात् सदा मङ्गलम् ॥ ७ ॥

ஸௌரி: க்ருஷ்ணருசிஶ்ச பஶ்சிமமுக: ஸௌராஷ்ட்ரப: காஶ்யபோ
நாத: கும்பம்ருகர்க்ஷயோ: ப்ரியஸுஹ்ருச்சுக்ரக்ஞயோர்க்ருத்ரப:
ஷட்த்ரிஸ்த: சுபதோசுபோ தனுகதிஶ்சாபாக்ருதௌ மண்டலே
ஸந்திஷ்டன் சிரஜீவிதாதிபலத: குர்யாத் ஸதா மங்கலம். 7

ராகு

राहुर्बर्बरदेशपो निर्ऋतौ कृष्णाङ्गशूर्पासनो
याम्याशाभिमुखश्च चन्द्ररविरुत् पैठीनसिः क्रौर्यवान् ।
षट्त्रिस्थः शुभकृत् करालवदनः प्रीतश्च दूर्वाहुतौ
दुर्गापूजनतः प्रसन्नहृदयः कुर्यात् सदा मङ्गलम् ॥ ८ ॥

ராஹுர்பர்பரதேஶபோ நிருருதௌ க்ருஷ்ணாங்கசூர்ப்பாஸனோ
யாம்யாஶாபிமுகஶ்ச சந்த்ரரவிருத் பைடீனஸி: க்ரௌர்யவான்
ஷட்த்ரிஸ்தஶ் சுபக்ருத் கராலவதன: ப்ரீதஶ்ச தூர்வாஹுதௌ
துர்க்காபூஜனத: ப்ரஸன்னஹ்ருதய: குர்யாத் ஸதா மங்கலம். 8

கேது

केतुर्जैमिनिगोत्रजः कुशसमिद्वायव्यकोणे स्थितः
चित्राङ्कध्वजलाञ्छनो हि भगवान् याम्याननश्शोभनः ।
सन्तुष्टो गणनाथपूजनवशाद् गंगादितीर्थप्रदः
षट्त्रिस्थश्शुभकृच्च चित्रिततनुः कुर्यात् सदा मङ्गलम् ॥ ९ ॥

கேதுர்ஜைமினிகோத்ரஜ: க்ருஶஸமித்வாயவ்யகோணே ஸ்தித:
சித்ராங்கத்வஜலாஞ்சனோ ஹி பகவான் யாம்யானனஶ் ஶோபன:
ஸந்துஷ்டோ கணநாதபூஜனவஶாத் கங்காதிதீர்த்தப்ரத:
ஷட்த்ரிஸ்தஶ்சுபக்ருச்ச சித்ரிததனு: குர்யாத் ஸதா மங்கலம். 9

श्रीमदादित्यादि-नवग्रह-मङ्गलाष्टकम्

संपूर्णम्

## நவக்கிரகங்கள்

**வா**னத்தில் உள்ள கிரகங்கள் மனிதனின் வாழ்வை ஆட்டுகின்றன என்பது பழைய காலத்திலிருந்து மக்களிடையே நிலவிவரும் நம்பிக்கை. செவ்வாய் உலகத்துக்கும் சந்திரலோகத்துக்கும் விஜயம் செய்ய இன்று விஞ்ஞானிகள் திட்டமிடுகிருர்கள். இத்தகைய விஞ்ஞான யுகத்தில் நவக்கிரகங்களைப் பற்றிப் பல சுவையான விஷயங்களைத் தொகுத்துக் கதை போல கி. வா. ஜகந்நாதன் கலைமகளில் தொடர்ந்து எழுதியிருந்தார். அவற்றைப் படித்து மகிழ்ந்த பல்லாயிரக் கணக்கான வாசகர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிப் பல வண்ணப் படங்களுடனும் ரேகைச் சித்திரங்களுடனும் சிறந்த முறையில் புத்தகமாக வெளியிட்டிருக்கிறோம்.

நவக்கிரக ஸ்தோத்திரங்கள், தியான சுலோகங்கள், தீக்ஷிதரின் நவக்கிரகக் கீர்த்தனைகள் இவை யாவும் இந்தப் புத்தகத்தின் விசேஷ அம்சங்கள்.

நவக்கிரகங்களைப்பற்றி அறிந்து விரும்பும் ஒவ்வொருவரும் இந்த அருமையான நூலைப் படித்துப் போற்றுவர் என்பது திண்ணம்.

